# தர்மசக்கரம்





காளயுக்தி ஹூ ஆனி மீ  சக்கரம் 27 ஆரம் 6

ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனம்

திருப்பராய்த்துறை - 639 115  திருச்சி ஜில்லா

# வாசகசாலைகள்

பொதுமக்கள் தம் அறிவை வளர்த்துக்கொள்வதற்கு ஆங்காங்கு அரசாங்கம் வாசகசாலைகளை நிறுவியுள்ளது. கிராமங்களிலும், இந்த வாசக சாலைகள் அமைந்துள்ளன.

ஏழை, எளியவர்களும் பொருட் செலவின்றி இந்த வாசகசாலைகளுக்குச் சென்று படித்துப் பயன்பெறுகின்றனர். இந்த வாசகசாலைகளில் இக லோக வாழ்க்கைக்காகும் புத்தகங்கள் மலிந்து கிடப்பதைக் காணலாம். ஆத்மீகக் கருத்துக்களைப் பரப்பும் தர்ம சக்கரம் வாசகசாலைகளில் வைக்கப் படுமானல் பலர் செலவின்றிப் பயனடைவார்கள். பொருள் வசதி உள்ள அன்பர்கள் தம் பெயரால் ரூ. 100 டிபாஸிட் செய்துவிட்டு மாதந்தோறும் வாசகசாலைகளுக்கு தர்மசக்கரம் பத்திரிகை போகும்படி செய்யலாம். இது சமூகத்துக்குச் செய்யும் பேருதவியாகும்.

## சந்தா விவரம்

**1. டிபாஸிட் சந்தா ரூ. 100**

ரூ. 100 அனுப்பி இங்கு டிபாஸிட் செய்து விட்டால் டிபாஸிட் இங்கு இருக்கும் வரையில் மாதந்தோறும் தர்மசக்கர பத்திரிகை தங்களுக்கு வந்துகொண்டிருக்கும். ஆண்டுதோறும் சந்தா செலுத்தி புதுப்பிக்க வேண்டியதில்லை. பத்திரிகை வேண்டாம் என்று கருதும்பொழுது டிபாஸிட் செய்த ரூபாய் நூறையும் திரும்பப் பெற்றுக்கொள்ளலாம். இந்தத் திட்டம் உள்நாட்டுக்கு மட்டும் உரியது.

**2. ஆண்டு சந்தா ரூ. 10**

ரூ. 10 செலுத்தியது முதல் அல்லது அடுத்த மாதம் முதல் பன்னிரண்டு மாதங்களுக்கு ஒவ்வொரு தமிழ் மாதமும் முதல் தேதியில் கிடைக்கும்படி பத்திரிகை அனுப்பப்படுகிறது.

**3. சகாய சந்தா ரூ. 5**

தர்ம சக்கரம் அடக்க விலைக்கு வெளியிடப்படுகிறது. ஆண்டு சந்தா ரூபாய் பத்துச் செலுத்த இயலாதவர்கள் ரூபாய் ஐந்து மட்டும் அனுப்பலாம். பாக்கி ரூபாய் ஐந்தைப் பாண்டிச்சேரி S. விஸ்வநாதன் 'தர்ம சக்கர உதவி நிதி' யினின்று ஈடுசெய்து கொள்கிறோம். தெய்வீக விஷயமாதலால் ரூபாய் பத்துச் செலுத்த இயலுகிறவர்கள் இந்தச் சலுகையைப் பயன்படுத்த வேண்டாம்.

**உள்நாடு தனி இதழ் ரூ. 1-00. வெளிநாடு வருட சந்தா ரூ. 20-00**

# தர்ம சக்கரம்

மாத சஞ்சிகை

| சக்கரம் 27 | காளயுக்தி ௵ ஆனி ௴ | ஆரம் 6 |
|---|---|---|

பொருளடக்கம் பக்கம்



## அந்தர்யோக விவரங்கள்

**திருச்சி ஜில்லா—கரூரில் 25—6—78 ஞாயிற்றுக்கிழமை**

இடம்: பசுபதிபாளையம், விவேகானந்த கல்வி நிலையம்
நேரம்: மாலை 6-00 மணிமுதல் 7-30 மணிவரை
நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள்

**ராமநாதபுரம் ஜில்லா—சிவகாசியில் 25—6—78 ஞாயிற்றுக்கிழமை**

இடம்: வெள்ளையாபுரம் ரோட்டிலுள்ள ஸ்ரீ சாரதா ஆச்ரமம்
நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை
நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி அசலானந்தர்
உணவு வசதி: நேரில் மதிய உணவிற்கு ரு. 1-00 செலுத்தி சீட்டுப் பெற்றுக் [கொள்ளலாம்.

**சென்னையில் 25—6—78 ஞாயிற்றுக்கிழமை**

இடம்: புரசவாக்கம் சர் M.C.T. முத்தையா செட்டியார் மாணவர் உயர்நிலைப் [பள்ளி
நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30மணிவரை
நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர்

[பின்பக்கம் பார்க்க]

## அந்தர்யோக விவரங்கள் (தொடர்ச்சி)

**பாண்டிச்சேரியில் 2—7—78 ஞாயிற்றுக்கிழமை**

*இடம்:* *சொசியெத்தே ப்ரோக்ரேஸிஸ்த் உயர்நிலைப்பள்ளி*
*நேரம்:* *காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை*
*நடத்துபவர்:* **ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர்**

**ராமநாதபுரம் ஜில்லா—சாத்தூரில் 2—7—78 ஞாயிற்றுக்கிழமை**

*இடம்:* *சாத்தூர் எட்வர்டு ஆண்கள் உயர்நிலைப்பள்ளி (பஸ் ஸ்டாண்டுக்கு எதிரில்)*
*நேரம்:* *காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை*
*நடத்துபவர்:* **ஸ்ரீமத் சுவாமி ஆத்மானந்தர்**

**திருநெல்வேலி ஜில்லா—அம்பாசமுத்திரத்தில் 2—7—78 ஞாயிற்றுக்கிழமை**

*இடம்:* *ஊராட்சி ஒன்றிய நடுநிலைப் பள்ளி*
*நேரம்:* *காலை 9-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை*
*நடத்துபவர்:* **ஸ்ரீமத் சுவாமி பரானந்தர்**

**சேலத்தில் 9—7—78 ஞாயிற்றுக்கிழமை**

*இடம்:* *ஸ்ரீ சாரதா கல்லூரியின் பிரார்த்தனை கொட்டகை*
*நேரம்:* *காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை*
*நடத்துபவர்:* **ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள்**
*உணவு வசதி:* *நேரில் ரூ. 1-00 செலுத்தி சீட்டுப் பெற்றுக்கொள்ளலாம்.*

**தர்மபுரி ஜில்லா—பாப்பாரப்பட்டியில் 9—7—78 ஞாயிற்றுக்கிழமை**

*இடம்:* *பழைய சுப்பிரமணிய சுவாமி கோவில்*
*நேரம்:* *காலை 10-00 மணிமுதல் மாலை 4-45 மணிவரை*
*நடத்துபவர்:* **ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர்**

**தர்மபுரி ஜில்லா—பாலஜங்கமனஅள்ளி கிராமம் 10—7—78 திங்கட்கிழமை**

*இடம்:* *அருள்மிகு பச்சையம்மன் தேவஸ்தானம்*
*நேரம்* *காலை 9-30 மணிமுதல் மாலை 5-00 மணிவரை*
*நடத்துபவர்:* **ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர்**

**மதுரை ஜில்லா—திருவேடகத்தில் 16—7—78 ஞாயிற்றுக்கிழமை**

*இடம்:* *விவேகானந்த கல்லூரி*
*நேரம்:* *காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை*
*நடத்துபவர்:* **ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள்**
*உணவு வசதி:* *நேரில் பகல் உணவிற்கு ரூ. 1-00ம் மாலை சிற்றுண்டிக்கு 75 பைசாவும் செலுத்தி சீட்டுப் பெற்றுக்கொள்ளலாம்.*

---

அந்தர்யோக நடைமுறையில் நாமஜபம், தியானம், உபந்யாசம், மௌனம், ஸத்ஸம்பாஷணை முதலியவை அடங்கும். உபந்யாசங்கள் யோகம், பக்தி, ஞானம் முதலியவைகளைப்பற்றி நடைபெறும். ஸத்ஸம்பாஷணையில் அன்பர்கள் தங்கள் சந்தேகங்களை நீக்கிக்கொள்ளலாம். விருப்பமுள்ள அன்பர்களும் தாய்மார்களும் அந்தர் யோகங்களில் கலந்துகொள்ளலாம். ஆனால் கைக்குழந்தைகளுடன் வரும் தாய்மார்களும் பன்னிரண்டு வயதிற்குக் கீழ்ப்பட்ட சிறுவர்களும் கலந்துகொள்ள அனுமதிக்கப்படமாட்டார்கள்.



प्रज्ञानं ब्रह्म

# தர்ம சக்கரம்

அறவாழி அந்தணன் தாள்சேர்ந்தார்க்(கு) அல்லால்
பிறவாழி நீந்தல் அரிது.

சக்கரம் 27 | காளயுக்தி ஹு ஆனி மீ | ஆரம் 6

## பிரார்த்தனை

वाराणसीपुरपते मणिकर्णिकेश वीरेश दक्षमखकाल विभो गणेश ।
सर्वज्ञ सर्वहृदयैकनिवास नाथ संसारदुःखगहनाज्जगदीश रक्ष ॥

— शङ्कराचार्यः

வாராணஸீபுரபதே மணிகர்ணிகேச
வீரேச தக்ஷமககால விபோ கணேச ।
ஸர்வக்ஞ ஸர்வஹ்ருதயைகநிவாஸ நாத
ஸம்ஸாரதுக்ககஹநாஜ்ஜகதீச ரக்ஷ ॥

காசிநாதா, மணிகர்ணிக கட்டத்துக்கு ஈசா, வீரேசா, தக்ஷன் யாகத்தை அழித்தவா, எங்கும் நிறைபொருளே, தேவகணங்களுக்குத் தலைவா, சர்வக்ஞா, அனைவர் உள்ளத்திலும் வீற்றிருப்பவனே, நாதனே, ஜகதீசா, பிறவிப்பெருங்கடலினின்று என்னைக் காப்பாற்றுவாயாக.

— சங்கராச்சார்யர்

வித்தன்றி யாதும் விளைவதுண்டோ நின்னருளாஞ்
சித்தன்றி யாங்களுண்டோ செப்பாய் பராபரமே.

— தாயுமானவர்

# அருள் விருந்து



நெறி பிறழாதவனுக்கு அச்சமில்லை.

பேச்சாளன் மிகைபடப் பேசுவதில்லை.

அறத்தை வளர்ப்பவன் ஆக்கத்தை வளர்க்கிறான்.

உலக நலனுக்காக உழைப்பவன் அருட்செல்வனாகிறான்.

அருள் நாட்டம் ஓங்குதற்கேற்ப உலக நாட்டம் மறைகிறது.

அன்பை வளர்ப்பவனுக்கு உலகம் முழுவதும் சொந்தமாகின்றது.

ஒன்றைக் கற்பது மட்டும் போதாது. கற்றதைப் பயன்படுத்தவேண்டும்.

இப்பொழுது உயிர் உற்று இருக்கும் உடல் ஒருநாள் உயிரற்றுத் தரையில் சடலமாகக் கிடக்கும்.

தெய்விகத்தில் ஆழ்ந்து ஊறி இருப்பவனே பிறர்க்குத் தெய்விகத்தை வழங்க வல்லவனாகிறான்.

சினம் முகத்தில் கடுகடுப்பை உண்டு பண்ணுகிறது. அன்போ முகத்தில் மலர்ச்சியை வளர்க்கிறது.

தங்க விலங்கு இரும்பு விலங்கைவிட எந்த விதத்திலும் மேலானதன்று. விலங்கினின்று விடுபட்டவனே மேன்மகன்.

ஒழுக்கத்தில் நிலைத்திருப்பவனுடைய உள்ளம், உரை, உடல் ஆகிய மூன்றும் திட்பம் நிறைந்தவைகளாகின்றன.

பிற உயிரைத் தன் உயிர் போன்று கருதுவது வெறும் பேச்சால் ஆகாது. அதை நடைமுறையில் கொண்டுவர வேண்டும்.

கயிறு பாம்பாகத் தென்படுகின்ற பொழுதும் அது கயிறே. அங்ஙனம் நீ ஜீவனாக உன்னை எண்ணிக்கொண்டிருக்கின்ற பொழுதும் நீ ஆத்மனே.

பிறரால் திணிக்கப்படும் நல்லொழுக்கம் பயன் தருவதில்லை. தனக்குத் தானே அமைத்துக்கொள்ளும் நல்லொழுக்கம் நலன் அனைத்தையும் வளர்க்கிறது.

உற்பத்தி ஸ்தானம் அழுக்கு நிறைந்திருப்பதை முன்னிட்டு நதியின் மகிமை குறைவதில்லை. மேன்மகனுடைய முன்னோர்கள் யாராயிருப்பினும் மேன்மகன் மேன்மகனே.



### பரமஹம்சர் புகட்டிய

# பெருநெறி விளக்கம்

விஜயர் பரமஹம்சரிடம் கேள்வி ஒன்று கேட்கின்றார். "பரப்பிரம்மமானது தாயாகவும் இலங்குகிறது என்றால் அந்த வஸ்துவுக்கு வடிவம் இருக்கிறதா அல்லது அது வடிவத்தைத் தாண்டிய பொருளா?"

பரமஹம்சதேவர்: "எப்பொருள்பரப்பிரம்மமாக இலங்குகிறதோ அதே பொருள் அன்னை காளியாகவும் இலங்குகிறது. அதே வஸ்துவை ஆதிசக்தி என்றும் அழைக்கலாம். செயலற்று இருக்கின்றபொழுது அது பரப்பிரம்மம். சிருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம் ஆகிய கிருத்தியங்களை நிகழ்த்துகின்றபொழுது அது சக்தி யென அழைக்கப்பெறுகிறது. கடலின் கீழ்ப் பகுதி அசைவற்று இருக்கிறது. பிரம்மத்தினுடைய பாங்கு அத்தகையது. கடலினுடைய மேற்பகுதி அலைகளாக வடிவெடுத்து உருண்டோடுகிறது. அத்தகைய மேற்பகுதியைச் சக்தி எனலாம். சக்தியைக் காளிகாதேவி என்று கூறுகிறோம். அதன் பொருள்யாதென்று தெரியுமா? காலமாக வடிவெடுத்திருப்பவள் காலி அல்லது காளி எனக் கூறப்பெறுகிறாள். அன்னவள் மகாகாலனாகிய பரவஸ்துவோடு இணக்கம் பூண்டிருக்கிறாள். அவள் வடிவம் அற்றவளாகவும் இருக்கிறாள். வடிவம் உற்றவளாகவும் இருக்கிறாள். வடிவத்தை எல்லாம் கடந்தது காளி என நீ கருதுவாயாகில் அக் கருத்துக்கு ஒப்ப நீ தியானம் பண்ணலாம். காளிகாதேவியின் கூறுகள் பலப்பல இருக்கின்றன. ஏதேனும் ஒரு கூறில் முழு நம்பிக்கை வைத்து தியானம் செய்து பழகினால் அவள் தன்னுடைய ஏனைய கூறுகளையும் காட்டியருளுகின்றாள். சாதனத்திலே ஆழ்ந்து செல்லச் செல்லக் கடவுளைப்பற்றிய ஞானம் தெளிவடைகிறது. கடவுளோடு இணக்கம் கொள்ளுதல் மிக எளிது என்பது சாதனத்தின் மூலமாக வெளியாகிறது. மக்கள் ஒருவரோடு ஒருவர் உரையாடுவதற்கு நிகராக உள்ளத்தின் உள்ளே இலங்கும் பரம்பொருளோடு உரையாடுவதும் சாத்தியமாகின்றது. அன்னை பராசக்தி எல்லாம் வல்லவள் என்கின்ற நம்பிக்கையை வளர்த்து வருதல் வேண்டும். நம்பிக்கையின் உறுதிக்கு ஏற்ப ஞானத்தெளிவும் மேலோங்குகிறது. மேலும் ஒன்றை ஞாபகத்தில் வைத்துக்கொள்ளுக. பரவஸ்துவுக்கு வடிவம் கிடையாது என்னும் நம்பிக்கை சாதகனொருவனிடம் உருவெடுத்திருக்குமாகில் அந்த நம்பிக்கையை உறுதியாகப் பிடித்துக்கொள்ளவேண்டும். எக்காரணத்தை முன்னிட்டும் அந்த நம்பிக்கையினின்று பின்வாங்கலாகாது. அதே வேளையில் ஆத்மசாதகன் பிடிவாதம் பிடித்தவனாக இருக்கக்கூடாது. கடவுளினுடைய பாங்கு இது ஒன்றுதான் வேறு எந்தப்பாங்கிலும் அவர் இலங்குவதில்லை என்று வெறிபிடித்த பாங்கில் விவாதம் பண்ணலாகாது. வடிவத்தை எல்லாம் கடந்த நிலையில் கடவுள் இருக்கிறார் என்னும் கொள்கையில் நான் நிலைத்திருக்கிறேன் என்று இயம்பலாம். அதே கடவுள் இன்னும் என்னென்னமோ பாங்குகளில் இருப்பதும் இயல்பு. அவருடைய இயல்புகளையெல்லாம் அவரே அறிகிறார். அவரை முற்றிலும் அறிந்துகொள்ள மக்களுள் யாருக்குத்தான் சாத்தியம்! அவருடைய பாங்குகள் எத்தனை எத்தனை என்பதை நான் அறியேன். அறிந்துகொள்வதும் எனக்குச் சாத்தியமன்று. இப்படி இயம்புவது பிடிவாதமாகாது. மனிதன் படைத்திருப்பது அல்ப அறிவு. இந்த அல்ப அறிவைக்கொண்டு வாலறிவனாகிய பரமனை முற்றிலும் அறிந்துகொள்வது எங்ஙனம்? ஓர் ஆழாக்குப் பால் கொள்ளுகிற பாண்டம் ஒன்றில் நான்கு ஆழாக்குப் பாலைத் திணித்து வைக்கமுடியுமா? கிருபைகூர்ந்து கடவுள் தம்முடைய மகிமைகளுள் எந்தப் பகுதியைப் பக்தனொருவனுக்குக் காட்டியருள்கின்றாரோ அந்தப் பகுதியை மட்டும் அவன் அனுபூதியில் நன்கு அறிந்துகொள்கிறான். அனுபூதிமானும் கடவுளுடைய மகிமைகளனைத்தையும் அறிந்து கொள்ள வல்லவனாகமாட்டான். தனக்குத் தேவையாயிருக்கும் ஒரு சிறு பகுதியை மட்டும் அவன் அறிந்து கொள்ளுகிறான்.

"தோற்றத்துக்கப்பாலுள்ள பரப்பிரம்மம் எதுவோ அதுவே தோற்றத்துக்கு வந்துள்ள சக்தியாகிறது. அந்தச் சக்தியையே ஆத்ம சாதகன் ஜகன்மாதா என அழைக்கிறான். பக்தனொருவன் பரம்பொருளையே நாடுகிறான். அந்தப் பரம்பொருளை அவன் அன்னை என்று அழைக்கிறான். அன்னை என்று அழைக்கப் படுகிற பராசக்தி வேறு பரப்பிரம்மம் வேறு எனக் கருதுவது வெறும் கற்பனையாம். ஒரே பொருள் தோற்றத்துக்கு வந்துள்ளதாகவும், தோற்றத்துக்கு அப்பாற்பட்டதாகவும் இலங்குகிறது. இதைப்பற்றிய இரகசியமோ, மூடு மந்திரமோ வேறு ஏதுமில்லை. இரகசியங்களும் மூடுமந்திரங்களும் ஏதேதோ இருக்கின்றனவென்று பக்தனொருவன் மனம் குழம்பலாகாது. மெய்ப்பொருள் ஒன்றே. இகத்துக்கு உரியதாகவும், பரத்துக்கு உரியதாகவும் அது இலங்குகிறது. எப்படி எப்படியெல்லாம் அது இலங்குகிறது என்னும் கோட்பாட்டில் பக்தனொருவன் கருத்தைச் செலுத்த வேண்டியதில்லை. தனக்குப் பிடிபடுகிற பகுதியை அவன் சிக்கெனப் பிடித்துக்கொள்ள வேண்டும். அவனுக்குத் தேவையான நலங்களனைத்தையும் அது வழங்கியருளுகிறது. அம்மெய்ப்பொருளை ஆழ்ந்து பற்றிப் பிடித்துக்கொள்ளுகிறவன் பிறகு தர்மம் எது அதர்மம் எது என்கின்ற கேள்வியிலும் மனம் குழம்பவேண்டிய அவசியமில்லை. இறைவனோடு தான் இணங்கியிருப்பதற்கு ஏற்ற செயல்களெல்லாம் தாமாகவே தர்மம் ஆகின்றன. பக்தனைப் பரமனிடத்திருந்து பிரித்து வைக்கிற செயல் எதுவோ அது அதர்மமாகிறது."

விஜயர்: "ஐயனே, பக்தனொருவன் தர்மம் அதர்மமாகிய கோட்பாடுகளையெல்லாம் கருத்தில் வாங்கிக் கொள்ளாது பக்தி மார்க்கத்திலேயே மூழ்கியவனாக இருக்கிறான். அத்தகைய பக்தன் அடையப்பெறுவது யாது?"

பரமஹம்சதேவர்: "பராபக்தியையே அந்தப் பக்தன் அடையப் பெறுகிறான். அன்னை பராசக்தியிடம் நான் இங்ஙனம் பிரார்த்தனை பண்ணினேன். 'ஓ தாயே, இதோ உன்னுடைய தர்மச் செயல்களையும், அதர்மச் செயல்களையும் என்னிடமிருந்து எடுத்துக்கொள். தூய பக்தியையே எனக்குக் கொடுத்தருள்வாயாக. ஓ தாயே, உனக்குச் சொந்தமாயிருக்கின்ற புண்ணியச் செயல்கள், பாபச்செயல்கள் ஆகிய யாவையும் என்னிடமிருந்து எடுத்துக்கொள். தூய பக்தியையே எனக்குக் கொடுத்தருள்வாயாக. ஓ தாயே, உனக்குச் சொந்தமாயுள்ள ஞானம், அக்ஞானம் ஆகிய வைகளை என்னிடமிருந்து எடுத்துக்கொள். தூய பக்தியையே எனக்குத் தந்தருள்வாயாக! இப்பாங்கில்தான் நான் பிரார்த்தனை பண்ணினேன். எனக்கு ஞானத்தைக் கொடுத்தருள் என்று அம்பிகையிடம் நான் பிரார்த்தனை பண்ணவில்லை. மக்கள் என்னை அங்கீகரித்துக் கொள்ளவேண்டும் என்ற பிரார்த்தனையையும் நான் பண்ணவில்லை. தர்மம் அதர்மம் ஆகியவைகளையெல்லாம் பக்தனொருவன் அறவே துறந்து விடுவானாகில் தூய பேரன்பு என்னும் பராபக்தி ஒன்றே அவனிடத்து எஞ்சி நிற்கிறது. அத்தகைய தூய அன்பில் தோஷம் ஏதுமில்லை. வேறு ஏதேனும் ஒன்றைப் பெறவேண்டும் என்கின்ற நோக்கத்தை முன்னிட்டு உருவெடுத்தது அன்று அந்தப் பேரன்பு. அந்தப் பேரன்பிலேயே திளைத்தவனாகப் பக்தன் இருக்கிறான். அந்த அன்பிலும் மிக்கது ஒன்றும் அவனுக்கு இல்லை."

பிரம்ம சமாஜத்து அன்பர் ஒருவர்: "பரப்பிரம்மத்தையும் அவர் படைத்துள்ள பராசக்தியையும் எவ்விதத்திலாவது பாகுபடுத்த முடியுமா?"

பரமஹம்சதேவர்: "நிறைஞானம் அடையப் பெற்றுள்ள ஞானியொருவன் பிரம்மம் வேறு, சக்தி வேறு என்று பாகுபடுத்துவதில்லை. இரத்தினம் ஒன்றினிடத்துப் பிரகாசிக்கும் தன்மையிருக்கிறது. ரத்தினத்தையும், அதனுடைய பிரகாசிக்கும் தன்மையையும் நாம் பாகுபடுத்த முடியாது. ரத்தினத்தை நினைக்கின்றவன் அதனுடைய பிரகாசிக்கும் தன்மையையும் நினைக்கிறான். மற்றோர் உபமானத்தைக் கொண்டு இவ்வுண்மையை விளக்கலாம். பாலும் அதனுடைய வெண்மை நிறமும் எங்ஙனம் பிரிவுபடாது இருக்கின்றனவோ அங்ஙனம் பிரம்மமும், சக்தியும் பிரிவுபடாது இருக்கின்றன. பாலைப்பற்றி நினைக்கிற பொழுது அதனுடைய வெண்மை நிறத்தைப் பற்றிய

நினைவும் சேர்ந்தே உண்டாகிறது. ஆனல் பர ஞானம் அடையப்பெருத ஒருவனுக்குப் பிரம் மமும் சக்தியும் ஒன்றே என்னும் மெய்யறிவு வாய்ப்பதில்லை. நிறைஞானம் வாய்க்கப்பெற் றுள்ள ஞானி ஒருவனுக்குச் சமாதி நிலை கூடு கிறது. அது சுத்த சைதன்யம். இருபத்தி நான்கு தத்துவங்களுக்கு ஆங்கு இடமில்லை. 'நான்' என்னும் கோட்பாட்டுக்கும் ஆங்கு இடமில்லை. சமாதியில் அடையப்பெறுகின்ற பாரமார்த்திகப் பேருணர்வைச் சொல்லால் விளக்க யாருக்குமே இயலாது. சமாதி நிலை கலைந்து உலக ஞாபகத்துக்கு ஞானி வரு கின்றபொழுது குறிப்பால் அதனை அவன் சுட்டிக்காட்ட முடியும். நிர்விகல்ப சமாதியி னின்று உலக ஞாபகத்துக்குக் கீழ் இறங்கி வந்து ஓம் என்னும் பிரணவ மந்திரத்தை உச் சரிக்கின்ற பொழுது நான் நூறு முழம் கீழ் நிலைக்கு வந்தவனுகின்றேன். வேதங்கள் புகட்டுகின்ற கோட்பாடுகள் பரப்பிரம்மத்தை எட்ட மாட்டா. சொற்களையெல்லாம் தாண் டிய பழம் பொருளாகிறது பரப்பிரம்மம். வார்த் தையால் அதை விளக்கமுடியாது. 'நான்' 'நீ' என்பனவற்றுக்கு ஆங்கு இடமில்லை.

ஜீவ வியக்தியில் அடங்கியிருக்கிற மனித னுக்கு 'நான்' என்பதும் 'நீ' என்பதும் உணர் வில் இருக்கின்றன. தான் பிரார்த்திப்பதாக வும், தியானம் பண்ணுவதாகவும் உணருகின்ற ஆத்ம சாதகனுக்குத் தன்னுடைய பிரார்த் தனைக்குச் செவிசாய்க்கும் மூர்த்தி ஒருவர் இருக்கிருர் என்கின்ற உணர்வும் சேர்ந்தே அமைந்திருக்கும். அந்நிலையில் இருப்பவன் இயம்ப வேண்டுவதாவது: 'இறைவா, நீ தலை வன். நான் உன்னுடைய தொண்டன். நீ முழு முதற்பொருள். அதில் ஓர் அல்ப அம்சமாக நான் அமைந்திருக்கிறேன். நீ தாய். நான் சேய்.' இத்தகைய ஜீவ வியக்தியில் கட்டுண்டு இருப் பவனிடத்துப் பேத புத்தியும் சிறிதும் இடம் பெறுகிறது. ஆத்ம சாதகர்களாகிய நம்ம வர்களை அபேத நிலைக்கு எடுத்துச் செல்லு வதும் பேத நிலையில் ஒட்டியிருக்கும்படி செய் வதும் இறைவனுடைய செயல்களாம். இங்ங னம் பேத புத்தி சிறிது எஞ்சியிருப்பதால் அந் நிலையிலிருக்கும் ஆத்ம சாதகன் ஒரு ஜீவனை ஆடவனுகவும், மற்ருெரு ஜீவனைப் பெண்பாலா கவும் பார்க்கிருன். இது இருள் இது வெளிச் சம் என்னும் பாகுபாடும் அவனிடத்து இருக் கிறது. இத்தகைய பாகுபாடோடு கூடிய உணர்வு ஒரு மனிதனிடத்து இருக்கும் வரை யில் அவன் ஈசுவரனுடைய ஆதிக்கத்தையும் அன்னை பராசக்தியினுடைய ஆதிக்கத்தையும் அங்கீகரித்தாக வேண்டும். நான் என்னும் ஜீவபோதம் இருக்கும் வரையில் பரம்பொருள் தம்மை ஒரு மூர்த்தியாகவே காட்டியருள்கிருர்.

ஆதலால் முடிந்த கோட்பாடு என்னவென் ருல் ஜீவபோதமும் ஒரு வியக்தியை மற்ருெரு வியக்தியினின்று பாகுபடுத்துகின்ற பேத புத்தி இருக்கும் வரையில் நிர்குண பிரம்மத் தைப்பற்றி அறிந்து கொள்ள அவனல் இய லாது. அதைப் பற்றி அவன் பேசுவதெல்லாம் வெறும் வாய்ப் பேச்சு அளவிலேயாம். ஆனல் அந்நிலையிலிருக்கும் ஆத்ம சாதகன் சகுண பிரம்மத்தை அங்கீகரிக்கின்ருன். அவருடைய விபூதிகளையும் அனுபூதி வாயிலாக உணருகின் ருன். விபூதிகளோடு கூடிய சகுண பிரம்மமே வேதங்களாலும், புராணங்களாலும், தந்த்ர சாஸ்திரங்களாலும் போற்றப் பெறுகின்றன. சகுண பிரம்மமே காளிகாதேவியென்றும், ஆதி சக்தி என்றும் போற்றப் பெறுகிருர்.''

விஜயர்: ''ஐயனே, ஆதிசக்தியின் தரிசனத் தைப் பெறுவதையும் பிரம்ம ஞானத்தைப் பெறுவதையும் சமரசப்படுத்துவது எங்ஙனம்?''

பரமஹம்சதேவர்: '' உள்ளன்போடு இறை வனை நாடிக் கண்ணீர் சிந்துவீராக. அதனல் அந்தக்கரண சுத்தியடைகிறது. தெளிந்த நீரில் சூரியனுடைய பிம்பத்தைக் காணு வது போன்று ஆதிசக்தியின் சொருபம் உள்ளத்தில் ஒளிர்வதைக் காண்பீர். சகுணப் பிரம்மமும் ஆதிசக்தியும் ஒன்றே. முற்றிலும் பரிபாகமாயிருக்கின்ற ஜீவ வியக்தி இருக்கும் பரியந்தம் ஆதிசக்தி அல்லது சகுண பிரம்மம் தவிர்க்க முடியாத பாங்கில் மெய்ப்பொருளே யாம். உள்ளத்தில் பிரதிபிம்பிக்கின்ற சகுண பிரம்மத்திடத்து உள்ளன்போடு பிரார்த்தனை பண்ணினல் அது தானே நிர்குண பிரம்மமாக இலங்குகிறது. அப்பொழுது பண் பட்ட ஜீவாத்மனும் சகுண பிரம்மமும் நிர்க்குண பிரம்மத்தில் ஒடுங்குகின்றன. சுத்த சைதன்யம் மட்டும் எஞ்சியிருக்கிறது. இது அத்வைதநிலை.

# பராபரக் கண்ணி

( தாயுமானவர் இயற்றியது )

353. கற்குநிலை கற்றூற்
கருவியவி மூாதருளாய்
நிற்குநிலை கற்பதுவே
நீதம் பராபரமே.

நீதம்—பொருத்தம்

பிரபஞ்சத்தைப் பிரபஞ்சமாகவே கண்டு பழகுதல் அபரவித்தை அல்லது இலெளகிக ஞானமாகும். இத்தகைய அபரவித்தையை எத்தனை ஜென்மங்களுக்கு வேண்டுமானாலும் வளர்த்துக்கொண்டே போகலாம். இந்த அபரவித்தையைக் கற்பதற்குக் கருவிகளாக இருப்பவைகள் புறக்கரணங்களாகிய கண், காது, மூக்கு, நாக்கு, மேனி ஆகியவைகளாம். அவைகளுக்கு மேல் அந்தக்கரணங்களாகிய மனம், புத்தி, சித்தம், அகங்காரம் ஆகியவை களாம். இவைகளைப் பயன்படுத்திப் பிரபஞ்ச அமைப்பை ஆராய்ந்து கொண்டே போனால் அந்த ஆராய்ச்சிக்கு முடிவு இல்லை. இம் முறையில் கல்வி கற்கக் கற்க மனிதனுக்கு மற்றோர் உண்மை புலனாகும். கற்றது கைம் மண்ணளவு கல்லாதது உலகளவு என்னும் ஞானத் திகைப்பு மனிதனுக்கு உண்டாகும். நவீன பௌதிக விஞ்ஞானிகள் இம்முறை யில்தான் இப்பிரபஞ்சத்தைத் தொடர்ந்து ஆராய்ந்துகொண்டே போகின்றனர். இக் கோட்பாட்டைப் புராணபூர்வமாகப் பகரு மிடத்து அறிவுப் பெரும்பிழம்பாகக் காட்சி கொடுத்த பரமனுடைய அடியைத் தேடிக் கொண்டு காத்தல் என்னும் கிருத்திய கர்த்தாவாக இருந்த திருமால் கீழ்நோக்கிச் சென்றார். அவருடைய முடியைத் தேடிக் கொண்டு சிருஷ்டி என்னும் கிருத்திய கர்த் தாவாக இருந்த பிரம்மதேவன் மேல் நோக்கிச் சென்றார். ஆனால் ஜீவவியக்தி படைத்திருந்த அம்மூர்த்தி இருவரால் அடிமுடி காண இயல வில்லை. அகண்ட வஸ்துவைக் கண்டநிலையி லிருக்கும் மூர்த்திகள் அளந்தறிய மாட்டார் கள் என்பது இதன் கருத்து. இதை மேலும் தெளிவு படுத்துதல் என்றால் ஆழாக்கைக் கொண்டு ஆழ்கடலை அளக்க யாருக்கும் இய லாது. ஆதலால் தத்துவ ஆராய்ச்சியிலேயே எத்தனை ஜன்மங்களைப் போக்கினாலும் பார மார்த்திக உண்மை விளங்காது. மனிதனு டைய சிற்றறிவைப் பயன்படுத்திப் பரமனு டைய பெருமைகளனைத்தையும் அறிந்து கொள்ளமுயல்வது ஆகாத காரியமாம். ஆத லால் ஆத்ம சாதகன் தன்னுடைய மனப் பான் மையை மாற்றியமைக்க வேண்டும். இந்திரிய ஞானங்களை ஒதுக்கிவைத்துவிட்டு அருள் நாட் டம் படைத்தவனாக ஆத்மசாதகன் மாறியமைய வேண்டும். பிரபஞ்சமாகத் தோன்றுகிற அனந்தங்கோடி வஸ்துக்களாக இலங்குபவர் அண்ணல் ஒருவரே என்னும் மனப்பான் மையை வளர்த்தால் அதன் வாயிலாக அருள் நாட்டம் ஓங்குகிறது. அருளைத் துணையாகக் கொண்டே அனைத்திடத்தும் இணக்கம் வைத் துப் பழகவேண்டும். இறைவா, நல்லவனாக வடிவெடுத்து விளையாடுபவனும் நீயே. கெட்ட வனாக வடிவெடுத்து விளையாடுபவனும் நீயே. இன்ப துன்பங்களை நல்குபவன் நீ. பிறவிப் பெருங்கடலை வளர்ப்பவன் நீ. கருவிகரணங் களைத் துணையாகக் கொண்டு அண்டகோடி களைத் தோற்றுவிப்பவன் நீ. ஜீவபோதத்தை விரித்துக்கொண்டேபோகிறவன் நீ. ஜீவ போதத்தை ஒடுக்கி அருள்நாட்டத்தை வளர்ப் பவன் நீ. உன்னுடைய அருளைக்கொண்டு அருள் நாட்டத்தில் நான் நிலைத்திருந்து பழகு வேனாக. அருள்நிலை என்னிடம் உறுதி பெறு கின்ற பொழுது அனைத்துமாய் இலங்குபவன் நீயே என்னும் தெளிவு எனக்கு உண்டா கிறது. அத்தெளிவிலே தத்துவ ஆராய்ச்சியின் தாண்டவம் முடிவுறுகிறது. பரமனாகிய உன் சொரூபத்தில் ஊறி இருப்பதே நான் அடைய வேண்டிய நிலையாகிறது. அத்தகைய அருள் நிலையை இறைவா, எனக்குத் தந்தருள்வா யாக என்பது இக்கண்ணியின் கருத்து.

354. காய்ச்சச் சுடர்விடும்பொற்
கட்டிபோல் நின்மலமாய்
பேச்சற் றவரே
பிறவார் பராபரமே.

பொற்கட்டி—பொன்கட்டி; நின்மலமாய்—நிர் மலமாய், அழுக்கு நீங்கப் பெற்றதாய்.

உலோகங்கள் யாவும் பூமியினின்று வெட்டி எடுக்கப்படுகிற பொழுது தாதுக்கள் என்னும் பெயர் பெறுகின்றன. அவை யாவையும் உலையிலிட்டு உருக்குகின்றவளவு மாசு நீங்கப் பெற்று ஒளிர்கின்றன. அத்தகைய உலோகங் களுள் பொன்னுக்குத் தனிச் சிறப்பு ஒன்று உண்டு. மற்றவைகள் உஷ்ணத்தில் உருகி இளகி இருக்கின்ற பொழுது மட்டுமே ஒளிர் கின்றன. சூடு தணியத் தணிய அவைகளின் பிரகாசமும் குறைகிறது. பொன்னின் பாங்கு அத்தகையதன்று. நெருப்பில் உருகி நீர் போன்று இருக்கிற பொழுதும் ஒளி வீசுகிறது. ஆறிப்போய் குளிர்ந்திருக்கிற பொழுதும் ஒளி வீசுகிறது. ஒளி வீசும் தன்மையில் அதன் பாங்கு எப்பொழுதுமே பின்னணிக்குப் போவ தில்லை. ஆயினும் அதனுடைய கடின நிலையிலும் இளகிய நிலையிலும் வேற்றுமை ஒன்று உண்டு. இளகிய நிலையில் பார்க்கப் பார்க்க அது கவர்ச்சிகரமாகத் தென்படும். பொன் கட்டியை எத்தனை தடவை உருக்கினாலும் அது கேடடை வதில்லை. அதன் மேலாம் பாங்கே மேலும் மேலும் மேல் நிலைக்குப் போகிறது. தவம் புரிகின்ற தவசிகளின் பாங்கு அத்தகையது. தவத்தில் வரம்பு கடந்து போதல் என்பது இல்லை. தவசி ஒருவன் தவத்திலே மேலோங்கு வதற்கேற்ப அவன் ஆத்மப் பிரகாசத்தில் மேலோங்குகிறான். தவசிகள் எல்லார்க்கும் முன்மாதிரியாயிருப்பவர் சிவபெருமான். கோர தபஸ்வின் என்னும் நாமம் அவருக்கே உரிய தாகிறது. பண்பாடடைவதற்காக ஜீவாத் மாக்கள் தவம் புரிகிறார்கள். பண்பாட்டின் உச்ச நிலையிலிருக்கும் சிவபெருமான் ஏன் தவம் புரியவேண்டும் என்னும் கேள்வி எழலாம். தவத்தில் திளைத்திருப்பதே அவருடைய நிஜநிலை. சூரியனுடைய பாங்கை உபமானமாக எடுத்துக் கொண்டு சிவனாருடைய தபசை ஓரளவு நாம் அறிந்துகொள்ள முடியும். தப: என்னும் வடமொழிச் சொல் ஒளிர்விட்டு உரு கிக்கொண்டு இருத்தல் எனப் பொருள்படு கிறது. சூரியன் யாண்டும் தபஸ்ஸின் வடிவ மாக ஒளிர்கிறது. அப்படி ஒளிர்ந்து கொண்டி ருப்பதே சூரியனுடைய பாங்கு. அதே விதத் தில் சிவனார் யாண்டும் தபஸ் சொரூபம். அது அவருடைய மகிமை. வேறு ஏதேனும் குறியை நோக்கி அவர் தவம் புரிபவர் அல்லர். யாண் டும் தபஸ் மயமாயிருப்பது அவருடைய விபூதி. ஜீவாத்மன் ஒருவனுக்குத் தவத்தில் நாட்டம் அதிகரிப்பதற்கேற்ப பேசும் பாங்கு அவனிடத் திருந்து பின்னணிக்குப் போகிறது. தபஸ் முற்றுவதற்கேற்ப பேச்சற்ற நிலை அன்னவ னிடம் அதிகரிக்கிறது. பேசும் பாங்கு அறவே அழிந்து பட்டுப்போகுங்கால் அந்த ஜீவாத்மன் பரவஸ்துவில் லயமாகிறான். அது பிறப்பு இறப்பைக் கடந்த பெருநிலை. தவத்தை வளர்க்க முயலுகிறவர்கள் மேலோர். அந் நிலையை ஆத்ம சாதகனொருவன் விரைந்து அடைய முயலவேண்டும் என்பது இக்கண்ணி யின் உட்பொருள்.

355. பற்றொழிந்து சிந்தைப்
பதைப்பொழிந்து தானேதான்
அற்றிருப்ப தென்றைக்
கமைப்பாய் பராபரமே.

பிரபஞ்ச வாழ்வில் பற்று வைத்திருக்கும் ஜீவாத்மன் ஒருவன் புளியம் பிஞ்சுக்கு நிகராகிறான். பிறவிப் பெருங்கடலை அனுபவித் துப் பார்ப்பதற்கேற்ப பிரபஞ்சப் பற்றுதல் கொஞ்சங்கொஞ்சமாகக்குறைகிறது. அப்படிக் குறைவதே பிரபஞ்ச வாழ்வின் பிரயோஜன மாம். பிறவிகள் எத்தனை எடுத்தாலும் பிர பஞ்ச வாழ்விலுள்ள இன்பதுன்பங்கள்ஒழிந்து பட்டுப் போகமாட்டா என்னும் விவேகம் உதயம் ஆகிறது. அந்த விவேகத்திற்கேற்ப உலகப்பற்றும் தானாகவே தணிகிறது.

மனிதனுக்கு உலகப்பற்று எவ்வளவு ஆழ்ந் ததோ அவ்வளவு பதைபதைப்பு அவனுடைய உள்ளத்தில் ததும்பிக் கொண்டிருக்கிறது. எண்ணிறந்த எண்ணங்களின் வேகம் அந்த ஜீவாத்மனைச் சர்வகாலமும் அலைக்கழித்துக் கொண்டிருக்கிறது. மனோவேகம் தணிவதற் கேற்ப எஞ்சியிருப்பது பரபோதம். பரபோதத் தில் ஜீவபோதம் கரைந்துபோகிறது. கடலில் விழுந்த மழைத்துளிக்கு நிகர் ஜீவபோதம். பரத்தை எட்டிய ஜீவாத்மன் ஜீவன் என்னும் வியக்தியைத் துறந்தவனாய்ப் பரத்தில் ஒன்று பட்டு இருக்கிறான். இதுவே வாழ்க்கையின் குறிக்கோள்.

---

# பரபோதம்

(ஸ்ரீ ராமகிருஷ்ணரின் அருட்செல்வரான சுவாமி பிரம்மானந்தரின் போதனை)

புலனடக்கமும் தியானமும் செய்கின்றவர்கள் உடல் சக்தி மனோசக்திகளையெல்லாம் ஆத்ம சக்தியாக மாற்றியமைக்கின்றார்கள். தியானத்தின்பொழுது மனதைப் புறத்தில் வைப்பதா அல்லது அகத்தில் வைப்பதா என்று குழம்பிக்கொண்டிருப்பவர்கள் இருக்கிறார்கள். அகத்தில் வைப்பதானால் இருதயத்தில் வைப்பதா, புருவங்களுக்கு இடையில் வைப்பதா, உச்சந்தலையில் சஹஸ்ராரம் என்னும் ஆதாரத்தில் வைப்பதா என்ற ஐயப்பாடுகள் உடையவர்கள் இருக்கிறார்கள். பொதுவாக இருதயத்தில் மனதை நிலைநிறுத்தி தியானம் பண்ணுவதுதான் ஏற்ற முறையாகும். அதனால் எந்த இடையூறும் வந்துவிடாது. அவரவருடைய மனநிலையைப் பொருத்து உடலின் எந்த இடத்தில் வேண்டுமானாலும் மனதை நிறுத்தி தியானம் செய்யலாம்.

அவரவர்கள் பெற்றிருக்கும் மனநிலைக்கு ஏற்ப மனதைப் புறத்திலோ, அகத்திலோ வைத்துத் தியானம் செய்யலாம். உடலை ஆலயமாகக் கருது. உடம்பினுள் உத்தமன் கோயில் கொண்டிருக்கிறான் என்று கருது. மனம் அடங்காத நிலையில் தியானம் கைகூடாது. பயிற்சியின் மூலமாகவும், வைராக்கியத்தின் மூலமாகவும் மனதை அடக்க முயல வேண்டும். மனம் அடங்குவதற்குக் கால நிர்ணயம் இல்லை. மனம் அடங்கும் வரையில் ஊக்கத்தோடு நீ சாதனை செய்துகொண்டே இருக்கவேண்டும். மனம் அடங்கிவிடுமாகில் மனதை நீ எங்கு வேண்டுமானாலும் வைத்துத் தியானம் பண்ணலாம். மனம் ஆத்ம சொரூபத்தில் லயமாகும்பொழுது உனக்குச் சில அபூர்வ அனுபவங்கள் ஏற்படலாம். முதலில் உன் உள்ளத்தில் ஒளி உண்டாகலாம். உலக இன்பம் எதனுடனும் ஒப்பிட முடியாத பேரின்பம் உன் உள்ளத்தில் உண்டாகும். அவ்வின்பத்தை உன் உள்ளம் விட்டுப் பிரியவிரும்பாது. அவ்வின்பத்தை விட்டு மனம் அப்பால் செல்ல ஒருப்படாது. மேலும் நீ தியானத்தில் ஆழ்ந்து போவாயாகில் உன் இஷ்ட தெய்வக் காட்சி உண்டாகும். உலக உணர்வையும், உடல் உணர்வையும் கடந்து உன் இஷ்ட தெய்வ உணர்வு உன் உள்ளத்தில் உறுதியானதாக இருக்கட்டும்.

சில சமயம் உன் உள்ளத்தில் ஓங்கார ஓசையை நீ கேட்பாய். அந்த ஓசையில் உன் மனம் ஒன்றித்துவிடும். தெய்வக்காட்சிகள் உனக்கு உண்டாகலாம். தெய்வீக அனுபவங்கள் பல ஏற்படலாம். சாதனையில் மேலே போகப் போக ஆத்மீக அனுபவங்களுக்கு முடிவே இல்லை என்பதை நீ உணர்வாய். ஆத்மீக அனுபவத்தில் நீ திருப்தியுடையவன் ஆகிவிடக் கூடாது. சாதனையில் சிறிது முன்னேற்றம் அடைந்ததும் உனக்கு ஏற்படுகிற அனுபவத்தை வைத்துக்கொண்டு இவ்வளவுதான் ஆத்மீகம் என்று முடிவு பண்ணிவிடாதே.

சிலர் உள்ளத்தில் ஒளியைக் கண்டவுடன் கடவுள் சாக்ஷாத்காரம் பெற்று விட்டதாக நினைக்கின்றனர். நீ அந்த மயக்கத்துக்கு ஆளாகிவிடாதே. நீ வேறு கடவுள் வேறு என்ற உணர்வு இருக்கும் வரையில் முடிந்த நிலையாகிய நிர்விகல்ப சமாதியை நீ அடைந்தவனல்லன். நிர்விகல்ப சமாதியில் தனி வியக்தி ஒன்றும் இல்லை. துவந்த உணர்ச்சி ஆங்கு அழிந்து போகிறது. அது ஆத்மீக அனுபவத்தின் முடிந்த நிலை என்று சிலர் சொல்லுகின்றனர். அதுதான் ஆத்மீகத்தின் துவக்கமாகும். உலக விஷயத்தில் உனக்கு ஆசை இருக்கக் கூடாது. ஆனால் அருள் நாட்டத்தில் உனக்கு ஆசை அதிகரித்துக் கொண்டே போகவேண்டும். அருள் விஷயத்தில் போதும் என்ற திருப்தி உண்டாகக் கூடாது. அருள் நாட்டம் அதிகரிக்கின்ற அளவு உனக்கு அருள் துறையில் அனுபவம் அதிகரிக்கிறது.

ஆத்மசாதனத்தில் சிறிது முன்னேற்றம் அடைந்த உடன் அந்நிலையிலேயே பலர் நின்றுவிடுகின்றனர். அதற்கு மேல் முன்னேற்றமடைவதற்கு அவர்கள் மனம் விருப்பம் கொள்வதில்லை. அது மனதின் குறைபாடாகும். அதை மனதின் பலஹீனம் என்றே சொல்லலாம். மனம் தன்னுடைய சக்திக்கு ஏற்றவாறு முன்னேற்றமடைகிறது. மனோசக்தியே நம்மைக் கட்டுப்படுத்தி வைக்கிறது. உன் மனதைச்

சக்தி உடையதாக்க வேண்டும். மனோசக்தியை விருத்தி செய்ய நீ சாதனை செய். உள்ளத்தைத் திண்ணியதாக்குகின்ற அளவு நீ சாதனையில் முன்னேற்றமடைகின்றாய்.

''வினைத்திட்பம் என்பது ஒருவன் மனத்திட்பம்
மற்றைய எல்லாம் பிற''

என்பது குறள். மனத் திட்பத்தை வளர்ப்பதற்கு மனத்தின்கண் தூய்மையை நீ உண்டாக்க வேண்டும். காமமும் கோபமும் மனதை ஆட்கொள்ள அனுமதிக்கக் கூடாது. ஆசைகளை மனம் அற்பமாக எண்ணி விரட்டியோட்ட வேண்டும். ஆசைக்கு மனம் வசப்பட்டு அதன் ஆதிக்கத்துக்கு உட்படக் கூடாது. ஆசைக்கு உன் மனது வசப்படும் அளவு உன் மனது பலஹீனம் அடைகிறது. ஆசைக்கு வசப்படாது இருக்கும் ஒவ்வொரு வேளையிலும் உன் மனது திட்பமுடையதாகிறது.

மனத்தளர்ச்சிக்கு நீ இடம் கொடுத்து விடுவாயானால் நீ விரைவில் கீழ் நிலைக்குப் போய்விடுவாய். மனத்தைத் தளர்வுறுத்தும் எண்ணத்துக்கும் உணர்ச்சிக்கும் நீ ஒருபொழுதும் இடம் தரக்கூடாது. மனத்தைத் தளர்வுறுத்தும் எண்ணங்களும், உணர்ச்சிகளுமே உன் சாதனைக்கு வந்தமையும் தடைகளாகின்றன. மனத்தளர்வை உண்டாக்கும் எண்ணங்களும் உணர்ச்சிகளும் உன் உள்ளத்தில் ஆதிக்கம் செலுத்துமானால் நீ சாதனையில் முன்னேற்றம் அடைய முடியாது. எனவே அத்தகைய எண்ணங்களையும், உணர்ச்சிகளையும் அற்பமானவைகள் என்று எண்ணி அவைகளை விரட்டி ஓட்டுவதில் நீ விழிப்புடன் இருக்கவேண்டும்.

மனம் எப்பொழுதுமே ஒருவித நிலையில் இருக்காது. மனம் அடிக்கடி மாறியமைந்து கொண்டேயிருக்கும். சில சமயம் உனக்கு உபதேசம் செய்து நீ சாதனையில் முன்னேறுவதற்கு உதவி செய்யவேண்டுமென்ற மனநிலை எனக்கு இருக்கிறது. இன்னும் சில சமயம், ''எல்லாம் இறைவன் செயல். அவர்தாம் யாவையும் செய்து வருகிறார். அவரே செயல்கள் அனைத்துக்கும் காரணமாகவும் கருவியாகவும் இருக்கின்றார். அவருடைய விளையாட்டு எல்லையில் அடங்காததாக இருக்கிறது. அவர் பல தோற்றங்களிலிருந்து விளையாட்டுப் போன்று செயல்கள் செய்து வருகிறார். கடவுளுடைய இச்சையால் எல்லாம் நிகழும் போது நான் யாருக்கு உபதேசம் செய்வது? என் உபதேசத்தை மக்கள் ஏன் ஏற்றுக்கொள்ள வேண்டும்?'' எனக்கு இத்தகைய மனநிலை ஏற்படுகிறது. ஆனால் குழந்தாய்! நீ ஒன்றை மட்டும் ஞாபகம் வைத்துக்கொள். கடவுளின் அருள் பெற்றவர்கள் கூறும் வாக்குகளை மக்கள் ஏற்றுக்கொண்டு அவற்றின்படி நடக்கின்றனர். கடவுள் அருள் பெற்றவர்கள் தாங்கள் பேசுவதாக உணர்வதில்லை. யாரோ தங்களைப் பேசுவிப்பதாக உணர்ந்து அகங்காரமற்றுப் பேசுகிறார்கள். எனவே அவர்களுடைய வாக்குகள் எல்லாம் சக்தி நிறைந்த வாக்குகளாகும். அவ்வாக்குகள் மனித உள்ளத்தில் பெரும் மாறுதலை உண்டு பண்ணுகின்றன.

''கடவுளுடைய அருள் காற்று ஓயாது வீசிக்கொண்டிருக்கிறது. பாய்மரத்துணியை விரித்துக் கட்டு'' என்று ஸ்ரீ ராமகிருஷ்ணர் பகர்வதுண்டு. காற்றில்லாத பொழுது உனக்கு விசிறி தேவைப்படுகிறது. குளிர்ந்த காற்று வீச ஆரம்பித்ததும் நீ விசிறியைக் கீழேவைத்து விடுகின்றாய். அங்ஙனம் ஈசனுடைய அருளை உணர்கின்ற வரையில் நீ செயல் புரிகின்றாய். அவருடைய அருளை உணர்ந்ததும் உன் செயல் நின்று விடுகின்றது. அதன் பிறகு உன்மூலம் ஈசன் செயலே நிகழ்கிறது.

நான் ஒரு சமயம் தீய எண்ணங்களுக்கு உட்பட்டவனாக இருந்தேன். என் நிலையை அறிந்த ஸ்ரீ ராமகிருஷ்ணர் என் அருகில் வந்து என் நாவில் எதையோ எழுதி என் காதில் எதையோ ஓதினார். அவர் ஓதியது எனக்குத் தெளிவாக விளங்கவில்லை. ஆனால் அவர் அங்ஙனம் செய்தவுடனே என் மனம் அமைதியடைந்தது. மனதைக் கலைத்த தீய எண்ணங்கள் இருந்த இடம் தெரியாமல் மறைந்தன. ஆரம்ப சாதகர்களுக்கு இத்தகைய உதவி தேவைப்படுகிறது. சாதனையில் முன்னேற்றம் அடைந்தவர்களின் உள்ளத்தை எதுவும் அசைக்க முடியாது. சாதனையின் ஆரம்பதசையில் பூஜா கிரியைகள், முத்திரைகள் போன்றனவற்றின் உதவிகளை நீ பெறவேண்டும். சாதனையில் முன்னேற்றம் அடைந்து விட்டால் அவைகள் உனக்குத் தேவையில்லை. சாதனையில் முன்னேறுவதில் தீவிரமாக இரு.

---

# தாரணை அல்லது மன ஒருமுகப்பாடு

(சுவாமி விவேகானந்தர் 1900ஆம் ஆண்டில் ஸான்பிரான்ஸிஸ்கோவிலுள்ள வாஷிங்டன் மண்டபத்தில் நிகழ்த்திய சொற்பொழிவு)

(172ஆம் பக்கத் தொடர்ச்சி)

ஒவ்வொரு மதத்திலும் நல்லறிவு படையாத மக்கள் இருக்கின்றனர். அவர்கள் சமயத்தைக் கடைப்பிடிக்கும்பொழுது சமயத்தைக் கீழ்நிலைக்குக் கொண்டு வந்து விடுகின்றனர். சாரத்தை விட்டுவிட்டுச் சக்கைக்குச் சண்டை போடுபவர்கள் இருக்கிறார்கள்.

“இதுதான் சரி; அதுதான் சரி,” என்று சண்டையிலிறங்கிக் காலத்தை வீண் போக்குகிறார்கள். அத்தகையவர்கள் ஆத்மீகத்தை மறந்துவிடுகிறார்கள். வடிவங்கள், கடைப்பிடிக்கின்ற கொள்கைகள் ஆகியவைகளைப் பற்றிச் சண்டை சச்சரவுகள் நிகழ்கின்றன. அவற்றிற்கு அடிப்படையாக இருக்கும் ஆத்மீகத்தைப் பற்றிச் சண்டை எதுவும் இல்லை.

பௌத்தர்கள் பல ஆண்டுகளாக மதப்பிரச்சாரம் செய்துவருகிறார்கள். படிப்படியாக ஆத்மீகம் மறைந்துகொண்டு வருகிறது. அங்ஙனமே கிறிஸ்தவர்கள் மதப் பிரச்சாரத்தில் ஈடுபட்ட போதிலும் ஆத்மீகம் மறைந்துகொண்டுதான் இருக்கிறது. கடவுள் ஒருவரா, ஒன்றுக்கு மேற்பட்டவரா என்பதைக் குறித்துச் சண்டைபோட்டுக்கொண்டிருக்கிறார்கள். யாரும் கடவுளை நேரே தரிசித்து அவரைப் பற்றிய உண்மையை அறிந்துகொள்ள விரும்புவதில்லை. கடவுளைப் பற்றிய உண்மையை அறிந்துகொள்வதற்கு அவரை நேரே தரிசிப்பதுதான் உத்தமம்.

ஆசனம் என்பதைப்பற்றி அறிந்துகொள்வோம். மனதை அடக்குவதற்கு ஏதாவது ஒரு ஆசனத்தில் அமர்வது அவசியம். சிரமமில்லாமல் எந்த ஆசனம் யாருக்குச் சௌகரியமாக அமைகிறதோ அதுவே அவருக்கு உரிய ஆசனம் ஆகும். முள்ளந்தண்டு வளையாமல் உட்கார வேண்டும். உடம்பின் பளுவை முள்ளந்தண்டு தாங்கும்படியாகக் குனிந்து உட்காரக் கூடாது. முள்ளந்தண்டு உடல் பளுவிலிருந்து விடுபட்டு நிமிர்ந்திருக்கும்படியாக நாம் ஆசனத்தில் அமரவேண்டும். அதுவே ஆசனத்தில் அமரும்போது நாம் கவனிக்க வேண்டிய விஷயம் ஆகும்.

அடுத்து பிராணாயாமத்தைப் பற்றி நாம் அறிந்துகொள்ள வேண்டும். சுவாசப் போக்குவரத்தை ஒழுங்குபடுத்துவது முக்கியமானது. நான் கூறுவதெல்லாம் இந்தியாவில் எல்லாரும் கடைப்பிடிக்கக் கூடிய பொது விஷயம் ஆகும். உங்கள் நாட்டில் உங்களுடைய குழந்தைகளுக்குச் சில பிரார்த்தனைகளைக் கற்றுக் கொடுக்கிறீர்கள். இந்தியாவில் இந்திய மக்கள் தங்களுடைய குழந்தைகளுக்குச் சில உண்மைகளைப் புகட்டுகின்றார்கள்.

இந்தியாவில் சிறுவர்களுக்கு எந்தச் சமயத்தைப்பற்றியும் புகட்டுவதில்லை. அவர்களுக்கு இரண்டொரு பிரார்த்தனைகள் மட்டும் சொல்லிக் கொடுக்கப்படுகின்றன. அவர்கள் ஆசானை அடைந்து அவரிடம் உபதேசம் பெற விரும்புகிறார்கள். அவர்கள் பல மக்களிடம் செல்கிறார்கள். கடைசியில் “இவர்தாம் எனக்குப் பொருத்தமான குரு” என்று அவரிடம் உபதேசம் வாங்கிக் கொள்கிறார்கள். கல்யாணமானவனாக இருந்தால் அவனுக்கு ஒரு குரு இருக்கலாம். அவன் மனைவிக்கு வேறு ஒருவர் குருவாக இருக்கலாம். அவனுடைய மகன் இன்னொருவரைக் குருவாக ஏற்றுக்கொண்டிருக்கலாம். எனக்கும் என் குருவுக்கும் உள்ள சமய உறவு ரகசியமானது. மனைவி பின்பற்றுகிற சமயத்தைப் பற்றிய உண்மையைக் கணவன் அறியாதிருக்கலாம். நீ என்ன சமயத்தைப் பின்பற்றுகிறாய் என்று தைரியமாக அவளைக் கேட்கவும் மாட்டான். அவளும் அதைப் பகிரங்கமாகக் கணவனுக்குச் சொல்லமாட்டாள். அவன் கடைப்பிடிக்கின்ற மதம் அவனுக்கும் அவன் குருவுக்கும்தான் தெரியும். சில சமயம் ஒருவருக்குக் கேலிக் கூத்தாக அமைவது மற்றொருவருக்குச் சிறந்த போதனையாக அமைவதுண்டு. அவரவர்கள் தங்கள் சுமைகளைத் தூக்கிக்கொண்டிருக்கிறார்கள். அவர்களுடைய மனநிலைக்கு ஏற்றபிரகாரம் அவரவர்களுக்கு நாம் உதவி

செய்தாக வேண்டும். தாங்கள் எவ்வழியைப் பின்பற்றுவது என்பது தங்களுக்கும், குருவுக்கும், கடவுளுக்கும் இடையே உள்ள விஷயமாகும். எல்லார்க்கும் பொதுவான சில வழிமுறைகள் உண்டு. எல்லாக் குருமார்களும் அவற்றைப் போதித்திருக்கிறார்கள். பிராணயாமமும், தியானமும் யாவர்க்கும் பொதுவானவை. இதுதான் இந்தியாவின் வழிபாட்டு முறை.

கங்கைக் கரையில் ஆண்களும், பெண்களும், சிறுவர்களும் பிராணயாமமும், தியானமும் செய்து கொண்டிருப்பதை நாம் காணலாம். அவர்களுக்கு இன்னும் பல வேலைகள் இருப்பதால் சமயப் பயிற்சிக்காக அதிக நேரம் செலவழிக்க முடியாது. சமயத்துறைக்கென்றே தங்கள் வாழ்வைப் பயன்படுத்துகின்றவர்கள் பல முறைகளையும் அனுஷ்டித்துப் பார்ப்பார்கள். ஆசனத்தில் எண்பத்து நான்கு வகைகள் இருக்கின்றன. ஒருவரை வழிகாட்டியாக வைத்துக்கொள்பவர்கள் பிராணயாமப் பயிற்சி செய்து உடலின் பல்வேறு பகுதிகளில் ஏற்படும் சலனங்களை உணர்கின்றார்கள். பிராணயாமத்துக்கு அடுத்து தாரணை வருகிறது. மனதை ஒரு குறிப்பிட்ட இடத்தில் நிலை நிறுத்துவதுதான் தாரணை என்பதாகும்.

இந்து சிறுவர்களும், சிறுமிகளும், ஒரு குருவிடமிருந்து மந்திரதீக்ஷை பெற்றுக்கொள்கின்றனர். குருவிடத்திலிருந்து பெறுகிற சொல்தான் மந்திரம் ஆகிறது. மந்திரம் பரம்பரையாக வருவதாகும். தம்முடைய சிஷ்யனுக்குக் குரு சொல்கின்ற மந்திரத்தையே அவர் தம் குருவிடமிருந்து பெற்றிருப்பார். தாம் பெற்ற மந்திரத்தைக் குரு தம் சிஷ்யனுக்கு உபதேசிக்கிறார். 'ஓம்' என்பது மந்திரங்களில் ஒன்றாகும். மந்திரங்கள் பொருள் செறிந்தவைகள். அப்பொருளை யாரும் வெளியிடுவதில்லை. மந்திரத்தின் பொருளை எழுதமாட்டார்கள். மந்திரத்தைச் செவியின் மூலமாகச் சிஷ்யன் குருவிடமிருந்து பெறுகின்றான். அம்மந்திரத்தையே அவன் கடவுளாகப் போற்றுகின்றான். அம்மந்திரத்தைக் குறித்து அவன் தியானமும் செய்கின்றான்.

மழைக் காலத்தில் நான்கு மாதங்கள் நான் வாழ்க்கையை மந்திரத்தை ஓதிக் கழித்தேன். நான் அதிகாலையில் எழுந்து ஆற்றில் ஸ்நானம் செய்துகொள்வேன். பிறகு ஈரத்துணியுடன் சூரிய அஸ்தமனம் வரையில் மந்திரத்தை ஜபித்துக் கொண்டிருப்பேன். அதன் பிறகு ஏதாவது உணவு எடுத்துக் கொள்வேன். இதுதான் தினசரித் திட்டம்.

இவ்வுலகில் நாம் அடைய முடியாதது ஒன்றும் இல்லை என்று இந்தியன் ஒருவன் நம்புகின்றான். இந்த நாட்டில் ஒருவனுக்குப் பணம் தேவைப்பட்டால் அவன் வேலை செய்து அதைச் சம்பாதிக்கிறான். இந்தியாவில் மந்திரதீக்ஷை பெற்று ஒரு மரத்தினடியில் உட்கார்ந்துகொண்டு பணம் தன்னிடம் வர வேண்டுமென்று எண்ணுகின்றான். எண்ணத்தின் வலிவால் எல்லாம் வந்துவிடுமென்று இந்தியன் நம்புகின்றான். இங்கு நீங்கள் பணம் திரட்டுகின்றீர்கள். உங்களுடைய சக்தி முழுவதையும் பணம் திரட்டுவதில் செலவழிக்கின்றீர்கள்.

ஹட யோகிகள் என்று அழைக்கப்படும் பிரிவினர் அங்கு இருக்கின்றார்கள். தேகத்தை அழியாது பாதுகாத்துவைப்பதே சிறந்த நலம் என்று அவர்கள் பகர்கின்றார்கள். உடலைப் பற்றிக் கொண்டிருப்பதே அவர்களுடைய சாதனையாகும். அதற்காக அவர்கள் பன்னிரண்டு ஆண்டுகள் பயிற்சி பெறுகிறார்கள். குழந்தைப் பருவத்திலேயே அப்பயிற்சியை ஆரம்பித்து விடுகிறார்கள். இல்லாவிட்டால் அது சாத்தியப்படாது என்கிறார்கள். ஹட யோகியைப் பற்றி ஒரு ஆச்சரியமான விஷயமும் உண்டு. அவன் சிஷ்யனாக வேண்டுமென்றால் வனாந்திரத்துக்குச் சென்று அங்குத் தனியாக நாற்பது நாட்கள் வசித்து வரவேண்டும். அந்த நாற்பது நாட்களில் கற்றுக்கொண்ட பாடம்தான் அவன் அறிந்த விஷயம்.

கல்கத்தாவில் ஒரு மனிதன் ஐந்நூறு ஆண்டுகள் தான் வாழ்ந்திருப்பதாகக் கூறுகிறான். மக்களும் அவர்களுடைய பாட்டன்மார்கள் அவனைப் பார்த்ததாகக் கூறியிருப்பதாகச் சொல்லுகின்றார்கள். அவன் உடற்பயிற்சிக்காகத் தினமும் இருபது மைல் தூரம் நடக்கிறான் என்று சொல்ல முடியாது; ஓடுகிறான். அவன் தண்ணீருக்குள் சென்று உள்ளங்கால் முதல் உச்சந்தலை வரையில் சேற்றுக்குள்

தன்னை மறைத்து வைத்துக்கொள்கிறான். இங்ஙனம் நீரிலும் சேற்றிலும் விளையாடுகின்றான். இதில் எந்த நன்மையும் இருப்பதாக நான் நினைக்கவில்லை. (பாம்புகள் கூட இருநூறு ஆண்டுகள் இருப்பதாகக் கூறுகிறார்கள்.) அவன் வயதானவனாகத்தான் இருக்கவேண்டும். நான் பதினான்கு ஆண்டுகள் இந்தியாவில் சுற்றியபொழுது இந்தியாவின் எல்லாப் பகுதியிலும் அவனைப் பற்றி அறிந்திருந்த மக்களைப் பார்த்தேன். அவனும் தன் வாழ் நாள் முழுவதும் சுற்றியிருக்கிறான். அந்த ஹடயோகி எட்டு அங்குல நீளமுள்ள ரப்பர் துண்டு ஒன்றை விழுங்கிப் பிறகு அதை வெளியே எடுத்துவிடுவான். உடலின் உள்ளுறுப்புகளையும், வெளியுறுப்புகளையும் ஹடயோகி ஒரு நாளைக்கு நான்கு முறை கழுவ வேண்டும். அப்படி உடலை நீண்டநாட்களுக்கு வைத்து இருப்பதால் பயன் என்ன? சுவர் கூட ஆயிரம் ஆண்டுகளுக்கு அப்படியே இருக்கின்றது. அதனால் என்ன பயன்? நான் அவ்வளவு ஆண்டுகள் வாழ விரும்பவில்லை. இருக்கின்ற நாட்களில் வரும் தீவினையே போதும். மயக்கமும் குறைபாடும் உடைய இந்தத் தேகமே போதுமானது.

இன்னும் சில பிரிவினர்கள் இருக்கின்றார்கள். அவர்கள் இளமையோடு இருப்பதற்கு ஒரு துளி அமுது கொடுக்கிறார்கள். அதை அருந்தினால் இளமையோடு இருக்கலாம். இப்படி இருக்கின்ற பிரிவினர்களையெல்லாம் எடுத்து விளக்கிக்கொண்டே போனால் நான் பல மாதங்கள் கூறிக்கொண்டே போகலாம். அவர்களுடைய செயல்கள் எல்லாம் இவ்வுலகத்தோடு நின்றுவிடுகின்றன. ஒவ்வொரு நாளும் ஒரு புதிய பிரிவினர் தோன்றிக் கொண்டே இருக்கின்றனர்.

அப் பிரிவினர்களுக்கு மனதிலிருந்தே சக்தி வருகிறது. மனதைக் கட்டுப்பாட்டில் வைத்திருப்பதே அவர்களுடைய நோக்கம். முதலில் மனதை ஒருமுகப்படுத்தி ஒன்றினிடத்துச் செலுத்துகிறார்கள். முதுகுத்தண்டில் ஏதாவது ஓர் இடத்திலோ நாடியினிடத்திலோ மனதை நிலைநிறுத்த வேண்டுமென்கிறார்கள். நாடியினிடத்து மனதை நிலை நிறுத்துவதன் மூலம் யோகி உடலை வெற்றி கொள்கின்றான். யோகியின் அமைதிக்குப் பெரிய தொந்தரவு கொடுப்பதும், உயர்ந்த லட்சியத்துக்கு எதிராக இருப்பதும் சரீர உணர்வாகும். எனவே சரீரத்தை அடக்கி அதைத் தன் பணியாள் போல் தன் கட்டுப்பாட்டில் வைத்திருக்க யோகி விரும்புகிறான்.

தாரணைக்கு அடுத்தது தியானமாகும். தியான நிலை மிக உயர்ந்த நிலையாகும். மனத்தில் சந்தேகம் இருக்கும்பொழுது அது உயர்ந்த நிலையில் இருப்பதில்லை. தியானம் தான் மனதின் உயர்ந்த நிலையாகும். பண்பட்ட நிலையில் மனம் பொருள்களைப் பார்க்கிறது; கவனிக்கிறது. ஆனால் பொருள்களுடன் தன்னை ஐக்கியப்படுத்திக் கொள்வதில்லை. உடலில் வலியை உணரும் போதெல்லாம் நான் என் உடலோடு என்னை ஐக்கியப்படுத்திக்கொண்டிருக்கிறேன். இன்பத்தையோ, துன்பத்தையோ உணரும்போதும் சரீரத்தோடு நான் என்னை ஐக்கியப்படுத்திக் கொண்டிருக்கிறேன். ஆனால் உயர்ந்த நிலையாகிய தியான நிலையில் இன்ப துன்பம் ஆகிய இரண்டிலும் கட்டுப்படாத ஒரு ஆனந்த நிலை ஏற்படுகிறது. உடலுணர்வைக் கடந்த நிலையே தியான நிலையாகும். தியானநிலையில் நேரே துரிய நிலையை அனுபவிக்கிறோம். பூரணமாக மனம் ஒருமுகப்பட்டுவிட்டால் ஜீவன் சரீர பந்தத்திலிருந்து விடுபட்டுத் தன்னைத் தானே அறிகின்றான். எண்ணியதை ஒருவன் எண்ணியாங்கு பெறுகின்றான். ஆற்றலும் அறிவும் ஏற்கெனவே நம்மிடத்து இருக்கின்றன. ஜீவன் சக்தியில்லாத ஜடத்தோடு தன்னை ஐக்கியப்படுத்திக்கொண்டு துயரப்பட்டு அழுகின்றான். அழிந்து போகும் வடிவங்களோடும் ஜீவன் தன்னை ஐக்கியப்படுத்திக் கொள்கிறான். சரீர பந்தத்திலிருந்து விடுபட்ட ஜீவன் தன் சக்தியை எப்படிவேண்டுமென்றாலும் பயன்படுத்தலாம். சரீர பந்தத்திலிருந்து விடுவித்துக்கொள்ளாத ஜீவனுக்கு அது சாத்தியமாகாது. கடவுளை அறிபவன் கடவுளே ஆகின்றான். சுதந்திரமடைந்த ஆத்மாவுக்கு ஆகாத காரியம் ஒன்றும் இல்லை. பிறப்பும் இறப்பும் அச் சுதந்திர ஆத்மாவுக்கு இல்லை. சுதந்திர புருஷன் நித்திய முக்தனாக இருக்கின்றான். (முற்றும்)

# துறவு

(ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்களின் சொற்பொழிவு)

[177ஆம் பக்கத் தொடர்ச்சி]

இல்லற வாழ்வு வாழ்பவர்கள் வாழ்வாங்கு வாழக் கற்றுக்கொள்ளவேண்டும். வாழ்வாங்கு வாழ்ந்த வாழ்க்கையின் பயனாக நல்ல துறவியர்கள் தோன்றி வருவார்களானால் அது இல்லற வாழ்வின் பயனாகும். அப்பெரு வாழ்வுக்குத் தன்னை ஆயத்தப்படுத்துவதுதான் இல்லறத்தான் பண்ணும் தியாகமாகும். சிறுமைகளை எல்லாம் தியாகம் செய்துவிட்டுப் பெரு வாழ்வு வாழ்வதுதான் இல்லறத்தானுடைய தியாகம் ஆகும். அப்படித் தியாக மூர்த்திகளாக இருக்கும் இல்லறத்தார்களுக்குத்தாம் நல்லவர்கள் மக்களாகப் பிறக்கின்றார்கள். இல்லறத்தார்கள் தங்களுடைய வாழ்க்கையைப் பரமனுக்கென்று ஒப்படைத்து நன் மக்களைப் பெறுகின்றபோது அவர்களுக்கு அது சந்நியாசம் அல்லது தியாகம் ஆகின்றது.

கடவுள் வழிபாடு செய்வதற்காக லட்சக்கணக்கான மக்கள் கோயிலுக்குப் போகிறார்கள். அப்படி அவர்கள் கோயிலுக்குப் போகும் பொழுது காணிக்கை செலுத்துவதாகக் கோரிக்கை செய்கிறார்கள். கடைத்தேங்காயை எடுத்து வழிப்பிள்ளையாருக்கு உடைப்பது போன்று எங்கேயோ சம்பாதித்த பொருள் அல்லது தானியத்தைக்கொண்டு வந்து காணிக்கை செலுத்துகின்றனர். தங்களுக்குச் சொந்த செல்வமாக இருக்கின்ற சத்புத்திரர்களை இறைவன் பணிக்காக இறைவனிடம் ஒப்படைக்கின்ற காணிக்கையே ஒப்பற்ற காணிக்கை யாகும். சத்புத்திரனைப் பெறுவதற்கேற்ற நல் வாழ்வுவாழ்ந்து கடவுள்பணிக்கென்றே சத்புத்திரன் வேண்டுமென்று பிரார்த்தனைசெய்கின்றவர்கள் யாராவது இருக்கின்றார்களா? அத்தகைய இல்லறத்தார்களைக் காண்பது அரிது.

மானுடப் பிறவி அரிய பிறவி. அப்பிறவியைப் பயன்படுத்திச் சரியான பாங்கில் கடவுள் பக்தி பண்ண வேண்டும். தன்னிடத்தில் உள்ள உயர்ந்த பொருளைக் கடவுளுக்குப் படைக்க வேண்டும். நல்லதை எல்லாம் தனக்கென்று வைத்துக்கொள்பவன் கடவுளை ஏமாற்றுபவன் ஆகின்றான். தன்னுடைய ஜீவிதத்தையே கடவுளுக்குக் கொடுத்து விடுவது கடவுளுக்குப் படைக்கின்ற படைப்புகளுள் சிறந்த படைப்பு ஆகின்றது. அதற்கு அடுத்தபடியாக நல்ல மகப்பேறு பெற்று அம்மகவைக் கடவுளுக்குப் படைப்பதாகும். அது இரண்டாந்தரமான படைப்பு ஆகும். கள்ளத்தனமாகச் சம்பாதித்த பணத்தின் பெரும் பகுதியைத் தாம் வைத்துக்கொண்டு சிறு பகுதியைக் கடவுளுக்கு அளிப்பது கடவுளை ஏமாற்றுவதாகும். அதன் மூலம் அவர்கள் சிறுமைதான் அடைகின்றார்கள். சமுதாயம் இத்தகைய சிறுமைக்கு உள்ளாகி இருப்பதால் சத்புத்திரர்கள் தோன்றுவதில்லை. ஆகையால் தலைசிறந்த சந்நியாசிகளைக் காண்பதும் அரிதாக இருக்கின்றது. கிரஹஸ்த ஆச்ரமம் தூயதானால்தான் நல்ல துறவியர்கள் ஏராளமாக உருவாவார்கள். துறவியர்கள் ஏராளமாகத் தோன்றினால் சமுதாயம் தானாக மேல் நிலைக்குப் போகிறது. துறவியின் பரிபாகம் எத்தகையது அவன் தன்னை எந்த விதத்தில் பக்குவப்படுத்துகின்றான் என்பவற்றைப் புத்தர்பெம்மான் எடுத்துக் காட்டுகிறார். துறவியர்களுக்கு அவர் சிறந்த எடுத்துக்காட்டு ஆவார். துறவி வேந்தன் என்று அவரைச் சொல்லலாம். புத்தர் தோன்றியபொழுது அவருக்கு ஜோதிடர்கள் ஜாதகம் கணித்தார்கள். "இவன் பெரிய உலகையாளும் சக்கரவர்த்தி ஆவான்; அல்லது அருளை ஆளும் துறவி வேந்தனாவான்" என்று ஜோதிடர்கள் கூறினார்கள். அவர் துறவியாவதைத் தடுத்து நிறுத்துவதற்குப் பிரபஞ்சத்தின் பாங்கை அவருக்கு மறைத்துவைக்க வேண்டுமென்று தந்தை எண்ணினார். கோடைக் காலத்துக்கு ஒன்றும், குளிர் காலத்துக்கு ஒன்றுமாக இரண்டு அரண்மனைகளை அவருக்காக அவர் தந்தை கட்டினார். இரண்டு அரண்மனைகளையும் சொர்க்கம் போன்று அமைத்தார். வயதானவர்கள் யாரும் அவ் அரண்மனைக்குள் வரக் கூடாது என்று ஏற்பாடு செய்திருந்தார்.

புத்தர் நகர் சுற்றிப் பார்க்க வேண்டுமென்று

விரும்பினர். உலகத் துன்பக் காட்சிகள் எதுவும் அவர் கண்ணில் படாதிருக்குமாறு ஏற்பாடு செய்து விட்டு நகர் சுற்றிப் பார்க்கப் புத்தருக்கு அவர் தந்தை அனுமதி கொடுத்தார். அவர் நகர் வலம் வரும்பொழுது தந்தையாரின் எல்லா ஏற்பாடுகளையும் மீறித் தெய்வாதீனமாக உடல் வற்றி எலும்பும் தோலுமாக உள்ள ஒருவன் புத்தர் முன் வந்து விட்டான். "இது என்ன நூதனமான பிராணியாய் இருக்கிறது?" என்று புத்தர் சாரதியைக் கேட்டார்.

*சாரதி:* "அது நூதனமான பிராணியன்று. மனிதன்தான் அந்த நிலையில் இருக்கின்ருன்."

*புத்தர்:* "இந்த மனிதனுக்கு மட்டும் ஏன் இந்த நிலை?"

*சாரதி:* "வயது முதிர முதிர எல்லாரும் இந்த நிலை அடைந்துதான் ஆகவேண்டும்."

*புத்தர்:* "அப்படியானல் நானும் இந்த நிலையடைவேனு?"

*சாரதி:* "நீங்களும் இந்த நிலை அடைந்துதான் ஆக வேண்டும்."

*புத்தர்:* "என் தந்தையும் இந்த நிலை அடைவாரா?"

*சாரதி:* "ஆம். அவருக்கும் இந்த நிலை வரும்."

*புத்தர்:* "என் மனைவி யசோதராவும் இந்த நிலை அடைவாளா?"

*சாரதி:* "ஆம். அவளும் இந்த நிலையையடைந்துதான் ஆகவேண்டும்."

*புத்தர்:* "என் மகன் ராகுலனும் இந்த நிலை அடைவானு?"

*சாரதி:* "உங்கள் மகன் உட்பட எல்லாரும் இந்த நிலை அடைந்துதான் ஆகவேண்டும்."

வாழ்க்கையில் தாம் அறிந்து கொள்ளாத பகுதி ஒன்று இருக்கிறது என்று சிந்தனையில் ஆழ்ந்தவராகப் புத்தர் அரண்மனைக்குத் திரும்பினர். மற்றொரு தடவை ஊர் வலம் போகும்போது எவ்வளவு ஏற்பாடு செய்திருந்தும் தெய்வாதீனமாகப் பிணத்தின் காட்சி யொன்று புத்தர் கண்ணில் பட்டுவிட்டது.

*புத்தர்:* "இவர்கள் எதைத் தூக்கிக்கொண்டு போகிருர்கள்?"

*சாரதி:* "இறந்து போன சவத்தைத் தூக்கிக் கொண்டு போகிருர்கள்."

*புத்தர்:* "நான் சாவேனு?"

*சாரதி:* "நீங்களும் அந்த முடிவுக்கு வந்துதான் ஆகவேண்டும்."

*புத்தர்:* "அப்பா சாவாரா?"

*சாரதி:* "அப்பாவும் செத்துத்தான் ஆகவேண்டும். பிறந்தவர்கள் அனைவரும் செத்துத்தான் ஆகவேண்டும்."

புத்தர் தாம் அறிந்துகொள்ளாத பகுதி இன்னும் ஏராளமாக இருக்கிறது என்ற சிந்தனையுடன் அரண்மனைக்குத் திரும்பினர். அவர் இருந்த மாளிகையின் கீழ் அம்பு தைக்கப்பட்ட பறவை யொன்று விழுந்தது. அப்பறவையின் உடலிலிருந்து இரத்தம் சொட்டியது. சிறகுகளை அப்பறவை உதறியது. பறவை கஷ்டப்படுவதையும், இரத்தம் சொட்டுவதையும் அன்றுதான் புத்தர் முதல் முதல் பார்த்தார். அந்தப் பறவைக்கு வேதனை எப்படி இருக்கும் என்று அறிந்து கொள்ளுதற்காக அப்பறவையின் மேலிருந்த அம்பை எடுத்துத் தம் உடலின் மீது குத்திப் பார்த்தார். குத்தின இடத்திலிருந்து இரத்தமும் வந்தது. வலியும் இருந்தது. உலகத்தைப் பற்றி அறிந்தது மிகக் குறைவு என்றும், அறியாத பகுதி ஏராளமாக உள்ளனவென்றும் தீர்மானித்தார். சிறைச்சாலை போன்று அரண்மனையிலிருப்பது பொருந்தாதென்றும் உலகத்தை அறிவதற்கு இவ்வரண்மனை என்னும் சிறைச்சாலையிலிருந்து வெளியேறியாக வேண்டுமென்றும் தீர்மானித்தார். அவருக்கு விவேகம் உதயமாகி விட்டது. தூங்கிக் கொண்டிருந்த யசோதராவையும் ராகுலனையும் நள்ளிரவில் பார்த்தார். அவர்களைப் பார்த்து அவர் பகர்ந்ததாவது: "நான் உங்களை நேசிக்கின்றேன். ஆனல் நான் வாழ்க்கையின் மர்மம் தெரியாதவனுக இருக்கின்றேன். வாழ்க்கையின் மர்மத்தை அறிவதற்காக அரண்மனையை விட்டு வெளியேறத் தீர்மானித்து விட்டேன். நான் வெளியேறிப் பெரிய பேறு பெறுவேனுகில் அதில் உங்களுக்கும் பெரிய பங்கு உண்டு. பெரிய லட்சியத்தை முன்னிட்டு உங்களைத் துறந்துவிடத் தீர்மானித்திருக்கிறேன்." இங்ஙனம் உறுதியாகத் தீர்மானம் செய்துகொண்டு அரண்மனையை விட்டு வெளியேறினர்.

அரண்மனைக்கு வெளியே குதிரைக்காரன் திறமைவாய்ந்த கண்டகன் என்னும் குதிரையைக் கொண்டுவந்து நிறுத்தினன். அந்தக்

குதிரையின் மீது ஏறித் தம் ராஜ்யத்தைக் கடந்து அப்பால் போய்விட்டார். அதன் பிறகு குதிரையை விட்டுவிட்டுத் துறவு பூண்டு பலரிடமிருந்து உபதேசங்களைக் கேட்டார். உடலைப் பட்டினிபோட்டுச் சாகும் நிலையில் இருந்தார். உடல் சக்தியற்றதாகப் போய் விடவே படுத்துக் கிடந்தார். கல்யாண ஊர் வலமொன்று அந்த வழியாகச் சென்றது. வீணையோடு பேசுவது போன்று பாடல் ஒன்று அக்கூட்டத்தினர் பாடினர். "வீணையே! உன்னிடம் உள்ள நரம்பைத் தளர்த்தினல் அதி லிருந்து இனிய ஓசை வராது. உன்னிடமுள்ள நரம்பை முறுக்கினலும் நரம்பு தெரித்துப்போய் விடும். அந்நரம்பை நடுநிலையில் வைத்திருந் தால்தான் உன்னிடமிருந்து இனிய ஓசையை உண்டுபண்ணலாம்." இத்தகைய கருத் துடைய பாடலைப்பாடிக்கொண்டுபோனர்கள். இப்பாடலைக் கேட்டதும் புத்தருக்கு விவேகம் உதயமாயிற்று. இவ்வுடலை ராஜபோகத்தில் வைத்திருந்தது ஒரு குற்றம். பட்டினிபோட் டது அதற்குச் செய்த மற்றொரு குற்றம். இனி இவ்விரண்டையும் கடைப்பிடிக்காது உடலை நடுநிலையில் வைத்திருக்கவேண்டும். "சமத்துவம் யோக உச்யதே" என்ற உண்மை அவருடைய உள்ளத்தில் உதயமா யிற்று. அவருடைய வாழ்க்கையில் புதிய அத்தியாயம் தொடங்கியது. சாதனையில் ஆழ்ந்து ஈடுபட்டார். போதி சத்வம் என் னும் உயர்ந்த ஞான நிலையை அடைந்தார். தாம் அடைந்த ஞானத்தை உலகம் முழுவ தற்கும் உரியதாக்க வேண்டுமென்று உறுதி பூண்டார். அங்ஙனமே உலக முழுவதற்கும் ஞானத்தை எடுத்து வழங்கினர்.

ஸ்ரீ ராமகிருஷ்ணர் விவேகானந்த சுவாமி களை நிர்விகல்ப சமாதி நிலைக்கு எடுத்துச் சென்றார். பிறகு அந்நிலையிலிருந்து உலக நிலைக்குக் கொண்டுவந்தார். "உனக்கு இப் போது என்னவேண்டும்?" என்று ஸ்ரீராம கிருஷ்ணர் விவேகானந்தரைக் கேட்டார். "நான் சற்று நேரத்துக்கு முன்பிருந்த பேரானந்த நிலையிலேயே யாண்டும் இருந்து விட நீங்கள் அனுக்கிரகம் பண்ண வேண்டும்" என்றார் விவேகானந்தர். அதற் குப் பரமஹம்சர் பகர்ந்ததாவது: "நான் உன்னை வீரனென்று எண்ணியிருந்தேன். ஆனல் நீயோ பாமரன் போன்று பிதற்றுகின் ருய்." இதைக் கேட்டதும் பிரபஞ்சத்தை மறந்து அதீதத்தில் பரத்தில் ஒன்றுபட்டு இருப்பது பாமரனுடைய செயலாகுமா? என்று விவேகானந்தர் மனதுக்குள் நினைத் தார். அப்போது பரமஹம்சர் விவேகானந் தரைக் கேட்டதாவது: "உன் கையில் கனி யொன்று கொடுக்கப்பட்டால் அதை நீ என்ன செய்வாய்?" விவேகானந்தர் பகர்ந்ததாவது: "அருகில் இருக்கின்றவர்களுக்கெல்லாம் அக் கனியைப் பகிர்ந்து கொடுத்துப் பிறகு நானும் அருந்துவேன்." "அஃதே போன்று ஞானச் செல்வத்தையும் உலகுக்கு எடுத்து வழங்கு தல் வேண்டும். நீ உலகுக்குக் கனி வழங்க வந்த வள்ளல் ஆவாய். நீ தனியாகக் கனி உண்ண வந்தவன் அல்லன்" என்றார் ஸ்ரீ ராம கிருஷ்ணர். புத்தர் தாம் பெற்ற ஞானத்தை உலகுக்குப் பங்கிட்டுக் கொடுக்கும்வரை நிர் வாண நிலையை ஒத்திவைத்திருந்ததைப் போன்று விவேகானந்தர் ஞானத்தை உல குக்கு எடுத்து வழங்கும் வரை நிர்விகல்ப சமாதியை ஒத்திவைத்திருந்தார். இங்ஙனம் யார் தமக்கென வாழாது பிறர்க்கென வாழ் கின்ருரோ அவர்தாம் துறவியாகின்ருர். குடும்பஸ்தன் தனக்கென வாழாது பிறருக் கெனத் தன்னிடத்துள்ளதை எந்த அளவுக்கு வழங்குகின்ருனே அந்த அளவுக்கு அவன் நல்ல குடும்பஸ்தன் ஆகின்ருன். உலகத்தை ஒதுக்கி வைத்துவிட்டுத் தன் நலனில் மட்டும் கண்ணும் கருத்துமாக இருப்பவன் அதமன் ஆகின்ருன். பிறருக்குத் தன்னைக் கொடுக்கின்ற அளவுதான் ஒருவன் மேலோன் ஆகின்ருன்.

முற்றும் துறந்த துறவிகள் கூட்டம் சமுதா யத்தில் அதிகரிக்க வேண்டும். உடல், பொருள், ஆவி அனைத்தையும் பரத்துக் கென்றே ஒப்படைத்து வாழ்கின்ற மனிதன் ஒப்பற்ற மனிதன் ஆகின்ருன். அப்பேர்ப்பட்ட வர்கள் கூட்டம் அதிகரிக்கும்பொழுது உலகம் பெருநலன் அடைகின்றது. முற்றும் துறந்த துறவிகள் இரண்டாயிரம் பேர் இருந்தால் இரண்டாண்டுக்குள்ளாக கிருதயுகத்தைக் கொண்டு வந்து விடலாம் என்று விவேகானந் தர் பகர்ந்துள்ளார். கிருதயுகம் என்பது

புறத்தில் உள்ளது அன்று. உலகில் நன் மக்களுடைய எண்ணிக்கை அதிகமாகும்போது கிருதயுகம் வந்து விடுகிறது. கெட்ட இயல்புகள் உள்ளவர்கள் தொகை அதிகரித்து அற வாழ்வைப்புறக்கணித்துச்சிறுநெறி செல்கின்ற கூட்டம் அதிகமாகும்பொழுது அதைக் கலியுகம் என்கின்றோம். பர நாட்டம் உடையவர்கள் உலகில் அதிகரித்து வருவார்களானால் இக்கலியுகத்தையே கிருதயுகமாக மாற்றலாம். மக்கள் விரும்பினால் கிருத யுகத்திலும் இருக்கலாம்; திரேதாயுகத்திலும் இருக்கலாம்; துவாபரயுகத்திலும் இருக்கலாம்; கலியுகத்திலும் இருக்கலாம். அவரவர்களுடைய மனப்பான்மைக்கு ஏற்ற பிரகாரம் அவரவர்களுக்கு யுகம் வந்து அமைகின்றது. எந்த யுகத்தில் தோன்றினாலும் துறவி ஒருவன் கிருதயுக வாசியாகவே வாழ்கின்றான்.

கிருத யுகத்தில் அறம் அல்லது தர்மம் என்னும் பசு நான்கு கால்களில் நிற்கின்றது; அப்பசு திரேதாயுகத்தில் மூன்று கால்களில் நிற்கின்றது; துவாபர யுகத்தில் இரண்டு கால்களில் நிற்கின்றது; கலியுகத்தில் ஒரு காலில் திண்டாடிக்கொண்டு நிற்கின்றது. கலியுகத்தில் அறநெறியைக் காண்பது அரிது. ஆனால் துறவியோ கலியுகத்திலும் அறநெறியே வடிவெடுத்தவனாக இருக்கின்றான். அறநெறியே வடிவெடுத்த துறவிகள் சமுதாயத்தில் இருப்பார்களானால் அவர்கள்மூலம் சமுதாயம் நலன் அடைகிறது.

நான்கு ஆசிரமங்களுள் இறுதி ஆசிரமமாக இருப்பது சந்நியாச ஆசிரமம் ஆகும். சமுதாயத்தில் பதினாயிரத்தில் ஒருவரையாவது நல்ல துறவியாகக் காணமுடியாது. லட்சத்துக்கு ஒருவர் இருந்தாலே அதிகம். சந்நியாசிகளுக்கு அத்தகைய பஞ்சம் வந்துள்ளது. இந்நிலைக்குக் குடும்பிகளே பொறுப்பாகின்றார்கள். குடும்பஸ்தர்கள் தவம் இருந்து சத்புத்திரர்களைப் பெற்றிருந்தால் இக்குறைபாடு வந்திருக்காது. இல்வாழ்பவர்கள் தங்களுக்குரிய அறநெறியிலிருந்து பிசகாது வாழவேண்டும்.

"இல்வாழ்வான் என்பான் இயல்புடைய மூவர்க்கும்
நல்லாற்றின் நின்ற துணை"

என்பது குறள். பிரம்மச்சரிய ஆசிரமத்தில் இருப்பவர்கள், வானப்பிரஸ்த ஆசிரமத்தில் இருப்பவர்கள், சந்நியாச ஆசிரமத்தில் இருப்பவர்கள் ஆகிய மூன்று ஆசிரமத்தில் இருப்பவர்களும் இயல்புடைய மூவர்கள் ஆகின்றார்கள். இம்மூன்று ஆசிரமங்களில் இருப்பவர்களை அறநெறியின்கண் செலுத்துவதும், அவர்களுக்கு உடை, உணவு வழங்கி வசதி செய்து கொடுப்பதும் கிரஹஸ்த ஆசிரமத்தில் உள்ளவர்களின் அறம் ஆகும். கிரஹஸ்த ஆசிரமத்தை மரம் என்று வைத்துக்கொண்டால் மற்ற மூன்றும் அம்மரத்திலிருந்து வந்தவைகளாகும். மரமாகிய கிரஹஸ்த ஆசிரமம் கெட்டுப் போய்விட்டால் மற்ற மூன்று ஆசிரமங்களும் கெட்டுப்போய்விடுகின்றன. அனைத்துக்கும் ஆதாரமாக உள்ள இல்லறந்தான் முறையாக வாழ்கின்றபொழுதுதான் சமுதாயம் மேல் நிலைக்கு வருகின்றது.

கனி நிலையில் துறவி இருக்கின்றான். கனியை உண்டு பண்ணுகின்ற நிலையில் குடும்பஸ்தன் இருக்கின்றான். கனியை உண்டு பண்ணுவது கிரஹஸ்தனின் பொறுப்பு. அக்கனி உலகுக்கு நன்கு பயன்பட்டால் அச்சிறப்பு கிரஹஸ்தனுக்கு உரியதாகிறது. ஒரு சமுதாயத்தில் நல்ல குடும்பிகளும், நல்ல துறவிகளும் இருக்கும்பொழுதுதான் சமுதாயம் சிறப்புற்ற சமுதாயம் ஆகின்றது. அவ்விரண்டு ஆசிரமங்களும் இக்காலத்தில் மங்கிப் போய்விட்டன. அவ்விரு ஆசிரமங்களையும் புதுப்பிப்பதற்காக ராமகிருஷ்ணர் அவதாரம் எடுத்தார். ''கிரஹஸ்த பரிவ்ராடு உபய பரம நிதர்சனய நம:'' என்று ஸ்ரீ ராமகிருஷ்ணரை அர்ச்சனை செய்து போற்றுகின்றோம். கிரஹஸ்த ஆசிரமம் எவ்வளவு சிறந்தது என்பதை ஸ்ரீ ராமகிருஷ்ணர் தம் வாழ்க்கையில் வாழ்ந்துகாட்டினர். சந்நியாச ஆசிரமம் எவ்வளவு சிறந்தது என்பதையும் தம் வாழ்க்கையில் வாழ்ந்து காட்டினர். மேலும் தலைசிறந்த குடும்பஸ்தர்களைத் தம்முடைய சிஷ்யர்களாக ஆயத்தப்படுத்தினர். தலை சிறந்த துறவியர்களையும் தம்முடைய சிஷ்யர்களாக ஆயத்தப்படுத்தினர். அவ்விரு கூட்டத்தினரும் ஞானத்தைப் பரப்புவதற்கு அவருக்கு வாரிசுகளாக வந்தமைந்தனர். இவ்விரு கூட்டத்தினரையும் ஆயத்தப் படுத்துவதைத் தம்முடைய கடமைகளுள் முக்கியமானதாகக் கருதினர். தமக்கு நல்ல சிஷ்

யர்கள் வந்து வாய்க்க வேண்டுமென்று தேவியையும் பிரார்த்தனை செய்தார். சிஷ்யர்களை ஆயத்தப்படுத்தியதும் பிரபஞ்சத்தில் தமக்கு இனி வேலை இல்லை என்பதை அறிந்தார். இப்பிரபஞ்சத்தை விட்டுப் போவதற்கும் நாள் குறித்துத் தம்மை ஆயத்தப்படுத்தினர். பொதுவாக மக்கள் மரணமடையப் பிரியப்படுவதில்லை. தொண்டுக்கிழவர்கள் ஆனலும் இன்னும் கொஞ்சநாள் வாழ்ந்திருக்க வேண்டுமென்றே விரும்புகிறார்கள். மற்றவர்களுக்கு வாய்ப்புக் கொடுத்துவிட்டு இப்பிரபஞ்சத்தை விட்டுப் போகலாம் என்று விரும்புவதில்லை. வாழ்க்கையில் நன்கு வாழ்ந்தவர்கள் மரணத்தையும் மகிழ்ச்சியோடு வரவேற்கின்றார்கள்.

நவீன மருத்துவ உலகம் நலம் செய்வது போன்று கேடும் செய்து வருகின்றது. மரணத் தறுவாயில் ''வீடு போ போ, காடு வா வா'' என்ற நிலையில் இருப்பவர்களுக்கு இன்னும் சிறிது காலம் உயிர் தாங்கித் தொந்தரவு படுவதற்கு நவீன மருத்துவம் உதவுகின்றது. பரமஹம்சர் நோய்வாய்ப்பட்டார். அவருக்குச் சிகிச்சை செய்ய முயன்றனர். அவரும் சிகிச்சையை விளையாட்டாக ஏற்றுக்கொண்டார். ''நீங்கள் இந்த உடலுக்கு உங்கள் விருப்பம் போல் சிகிச்சை செய்துகொள்ளுங்கள். ஆனல் நான் இந்த உடலை விட்டுப் போவதற்கு நாள் குறித்துவிட்டேன்'' என்றார் ஸ்ரீ ராமகிருஷ்ணர். ''உங்களை நாங்கள் போக அனுமதிக்க மாட்டோம். இன்னும் கொஞ்ச நாளைக்கு நீங்கள் இருக்கவேண்டும்'' என்றனர் மக்கள். ''என்னுடைய வேலை முடிந்துவிட்டது. சாரதா தேவியாரிடமும், விவேகானந்தரிடமும் என் பொறுப்பை ஒப்படைத்து விட்டேன். நான் போவதற்கு நாளும் குறித்துவிட்டேன்'' என்றார் ஸ்ரீ ராமகிருஷ்ணர். ''எங்கள் பொருட்டு நீங்கள் இன்னும் கொஞ்ச நாளைக்கு இருக்க வேண்டும்'' என்று கேட்டுக் கொண்டனர் மக்கள். ''நான் இருக்கவேண்டியது அவசியம் இல்லை. அம்பிகையின் திருவருள் எப்படியோ அது நிகழட்டும். உணவு உண்ண முடியாத அளவு தொண்டையில் நோய் வந்திருக்கிறது. உணவு செல்வதில்லை'' என்று ராமகிருஷ்ணர் பகர்ந்து விட்டுச் சிறிது நேரம் மௌனமாக இருந்தார். அதன் பிறகு அவர் பகர்ந்ததாவது: ''நீங்கள் தொந்தரவு செய்கின்றீர்கள். உங்களுடைய வற்புறுத்தலினல் நான் அம்பிகையிடத்துப் பிரார்த்தனை பண்ணினேன். 'இந்த ஒரு உடலில்தான் நீ வாழ்ந்திருக்கின்ருயா? இந்த ஒரு உடலில்தான் நீ உணவு உண்கின்ருயா?' என்று அம்பிகை என்னைக் கேட்டாள். அம்பிகை அப்படிக் கேட்டபோது எனக்கு வெட்கமாகப் போய்விட்டது.'' அம்பிகை கூறியதின் தத்துவம் என்ன என்று ஆராய்வோம். ஒரு சரீரம் போவதினல் சொரூபம் அழிந்து போவதில்லை. மற்ற சரீரங்களின் மூலமாகச் செயல்கள் நிகழ்ந்து வருகின்றன. ஸ்ரீ ராமகிருஷ்ணர் விவேகானந்தரைப் பற்றிப் பகர்ந்திருந்தார். ''நரேந்திரன் நாற்பதாவது வயதை எட்டிப் பார்க்கமாட்டான். அவன் தன்னை இன்னன் என்று அறிந்ததும் இப்பொழுது பெற்றுள்ள சரீரத்தில் ஒரு நிமிஷமும் இருக்கமாட்டான். உலகை ஒரு ஆட்டு ஆட்டுகின்ற அருள்சக்தி அவனிடத்தில் இருக்கிறது.'' விவேகானந்தர் தாம் சரீரத்தை உகுப்பதற்கு நான்கு ஆண்டுகட்கு முன்பே ஒரு கவிதை இயற்றினர். காஷ்மீரத்தில் அமெரிக்கர்களுடைய சுதந்தரதினத்தை ஜுலை நான்காம் தேதி கொண்டாடினர்கள். ஜுலை நான்கு என்ற தலைப்பில் ஆங்கிலத்தில் விவேகானந்தர் ஒரு கவிதை அமைத்தார். ''ஜுலை நான்காம் தேதி நல்ல நாள். இந்தச் சரீரத்திலிருந்து ஜுலை நான்காம் தேதி நான் சுதந்தரம் பெறுவேன். இன்னும் நான்கு ஆண்டுகளுக்கு நான் செய்ய வேண்டிய வேலை இருக்கிறது, நான்கு ஆண்டுகள் வேலைமுடிந்ததும் சரீரத்திலிருந்து நான் சுதந்தரம் பெற்றுவிடுவேன்'' என்றார். விவேகானந்தர் சரீரத்தை உகுப்பதற்கு இரண்டு மூன்று நாட்களுக்கு முன்னர் ''என் வேலையெல்லாம் முடிந்துவிட்டது. மூட்டை கட்டிக்கொண்டு கிளம்புதற்கு ஆயத்தமாக இருக்கிறேன்''என்றார். அவர் முன்பே எழுதியபடி ஜுலை நான்காம் நாள் வந்தது. தம்மை ஆயத்தப்படுத்தினர். உடலை உதறித்தள்ளி விட்டு அவர் குறிப்பிட்ட ஜுலை நான்காம் தேதி யன்று பரத்தை அடைந்தார். மரணத்தை மகிழ்ச்சியோடு ஏற்றுக்கொள்பவனே துறவி ஆகின்றன். வாழ்வும் மரணமும் துறவிக்கு ஒன்றே. (தொடரும்)

# ஸ்ரீ லலிதா வியாக்கியானம்-118

*690.* **कोशनाथा** கோசநாதா — பொக்கிஷத்துக்குத் தலைவி என்பது இந்த நாமத்தின் பொருள்.

ஓர் அரசாங்கத்தின் மேன்மைக்கு ஏற்ப அதனிடத்துச் செல்வம் வேண்டியவாறு அமைந்திருக்கவேண்டும். செல்வத்தின் வாய்ப்புக்கு ஏற்ப அரசாங்கத்தின் ஆட்சி முறை உன்னத ஸ்தானம் பெறும். ராஜ்யங்களுக்கு எல்லாம் மூலகாரணமாயிருப்பது பிரபஞ்சத்தின் பேரமைப்பு. பிரபஞ்சத்தின் பாங்கை ஆராய்ந்து பார்த்தால் அதில் அமைந்திருக்கும் ஒவ்வோர் அம்சமும் செல்வமாக விளங்குகிறது. நீர்வளம், நிலவளம் ஆகிய இவ்விரண்டு வளங்களும் ஏனைய ஆதாயத்துக்கு ஆதாரங்களாகின்றன. நீர்வளமும் நிலவளமும் ஓங்குமிடத்துக் குடிவளமும் தானாகவே ஓங்குகிறது. நன்மக்கள் நிறைந்துள்ள பிரதேசத்தில் அமைந்திருக்கும் வாய்ப்புக்களெல்லாம் தனங்களாகத் தெரிந்தெடுக்கப்படுகின்றன. பூமியில் பொன்னும் ரத்தினங்களும் புதைந்து கிடக்கின்றன. மூலநிலையில் அவைகள் வெறும் மண்ணுக்கு நிகர். பின்பு அவைகளைத் தோண்டி எடுத்துத் திருத்தியமைக்கின்றபொழுது அவைகளுக்குரிய மதிப்பு ஓங்குகிறது. மேலாம் பொருள்களைச் சரியாக மதிப்புப் போடுபவன் மனிதன். மனிதன் என்னும் சேதனப் பொருளும், மண், பொன், ரத்தினம் ஆகிய அசேதனப் பொருள்களும் அம்பிகைக்குச் சொந்தமாகின்றன. ஆதலால் அவள் கோசநாதா என்று போற்றப்படுவது பொருத்தமானதே. தன்னுடைய சிருஷ்டியில் எத்தகைய அரிய பெரிய ஜடப்பொருள்களையும் சேதனங்களையும் அவள் அமைத்துவைத்திருக்கின்றாள் என்பதை ஆராய்ந்து பார்க்குமிடத்து அவளுடைய மகிமை சொல்லாமலேயே நமக்கு ஓரளவு விளங்குகிறது.

கோசநாதா என்னும் பெயர் அம்பிகைக்கு மற்றொரு பாங்கில் பொருத்தமுடையதாக அமைந்திருக்கிறது. ஜீவகோடிகளின் அமைப்பில் ஒரே கோட்பாடு எல்லாப் படித்தரங்களிலும் இடம் பெற்றிருக்கிறது. சான்று ஒன்று எடுத்துக்கொள்வோம். வனஸ்பதி என்று இயம்பப்பெறுகிற காட்டு மரம் ஒன்று அரியகனியைத் தக்ககாலத்தில்தோற்றுவித்து உயிர்களை ஓம்புகிறது. அக்கனியின் அமைப்பில் மேல்தோல், உள் தோல், சதைப்பற்று, வித்து ஆகியவைகளைக் காண்கின்றோம். வித்து என்னும் உயிர்த்தத்துவத்துக்கு மேல் தோலும், உள் தோலும், சதைப்பற்றும் கோசங்களாக அமைந்திருக்கின்றன. அதே கோட்பாடு ஜங்கமங்களாக இருக்கின்ற உயிர்வகைகளிடத்தும் இலங்குகிறது. ஜங்கமங்களுள் உயர் நிலையை எட்டியிருப்பவன் மனிதன். மனிதன் என்னும் ஜீவாத்மன் பஞ்சகோசங்களைப் படைத்திருக்கிறான். ஒரு கனியின் அமைப்பில் இருப்பது போன்றே மானிட அமைப்பிலும் கோசங்கள் ஸ்தூல நிலையில் ஆரம்பித்துப் படிப்படியாக சூட்சும நிலைகளுக்குப் போகின்றன. மனிதன் படைத்திருக்கிற உடல் அன்னமய கோசம் எனப்படுகிறது. அதனுள் அதைவிடச் சூட்சுமமாக அமைந்து உடலெங்கும் வியாபித்திருப்பது பிராணமயகோசம் என்னும் உயிர்த் தத்துவம். அதைவிடச் சூட்சுமமாக உள்ளே வியாபித்திருப்பது மனோமய கோசம். அதனினும் நுண்ணியதாக உள்ளிருப்பது விஞ்ஞானமய கோசம். ஆனந்தமய கோசம் என்பது ஐந்தாவது இடம் பெறுகிறது. இந்த ஐந்து அங்கிகளை அணிந்திருப்பது ஜீவாத்மா. அத்தகைய ஜீவாத்மாவுக்குத் தாயாகவும், இறைவியாகவும் வீற்றிருப்பவள் அன்னை பராசக்தி. இக்கோட்பாடும் கோசநாதா என்னும் நாமத்தில் அடங்கப் பெற்றிருக்கிறது.

சேதனம், அசேதனமாக அமைந்துள்ள பிரகிருதியே அம்பிகைக்குச் சொந்தமான அரிய பெரிய பொக்கிஷமாகிறது. எல்லாப் படித்தரங்களிலுமிருக்கிற பொக்கிஷங்களை அதனதன் பாங்குக்கேற்ப அன்னை பராசக்தி பாதுகாத்து வருகிறாள். அத்தகைய அவளுடைய ஆட்சி முறையை எண்ணிப் பார்ப்பது அவளுக்குரிய நல்ல வந்தனை வழிபாடு ஆகும்.

*691.* **चतुरङ्गबलेश्वरी** சதுரங்க பலேச்வரீ — ரத, கஜ, துரக, பதாதி எனக் கூறப்பெறும் நான்குவித சேனைகளுக்குத்தலைவியாக

இருப்பவள் அம்பாள் என்பது இதன்பொருள்.

அரசாங்கம் ஒன்றுக்குச் செல்வம் இன்றியமையாத பொருளாக அமைந்திருப்பது போன்று சேனையும் இன்றியமையாத அங்கமாக அமைந்திருக்கிறது. பண்டைக்காலத்தில் சேனையின் அமைப்பு நான்கு கூறுகளை உடைத்திருந்தது. ஆதலால் சதுரங்க பலம் என்னும் பெயர் அக்காலத்தில் சேனைக்கு வந்தது. தேரில் அமர்ந்துகொண்டு பெரும் போர்புரிந்த போர்வீரர்கள் இருந்தார்கள். அவர்களுக்குக் கருவியாக அமைந்தது ரதம் அல்லது தேர். பெரும்பாலும் குதிரைகளைக் கொண்டே போருக்குரிய தேர்கள் இயங்கப் பெற்றன. ரதத்துக்கு அடுத்தபடியாக வருவது கஜம் அல்லது யானை. யானையின் மீது அமர்ந்துகொண்டு போர்வீரர்கள் யுத்தத்தில் தங்களுடைய பராக்கிரமங்களைப் பயன்படுத்தினார்கள். யானை ஒன்று எதிரியின் மீது வீராவேசத்தோடு முன்னேக்கிச் செல்லுங்கால் குன்று ஒன்று உருண்டு வருவதற்கு நிகராக அது எதிரிகளைப் பாழ்படுத்தியது. சேனையில் மூன்றாவது இடம் பெறுவது துரகம் அல்லது குதிரை. குதிரைகளின் மீது ஊர்ந்துகொண்டு போர்வீரர்கள் வேல்களைத் தாங்கியவர்களாக எதிரிகளின்மீது விரைந்து பாய்ந்து சண்டை செய்தனர். சேனையில் நான்காவது இடம் பெறுவது பதாதி அல்லது காலாட்கள். ஆயுதம் தாங்கியவர்களாகச் சிப்பாய்கள் நடந்து சென்று எதிரிகளைத் தாக்கிப் போர்புரிந்தனர். நல்ல ஆட்சிமுறை ஒன்றில் இந்த நான்குவிதமான சேனைகளும் தக்க இடம் பெற்றிருந்தன.

இயற்கை முழுதையும் அம்பிகையினுடைய ராஜ்ஜியம் என்று வைத்துக்கொண்டால் அதில் நல்லவர்களுக்கும் கெட்டவர்களுக்கும் இடையில் இடையிடையே சண்டை மூண்டு கொள்ளுவதுமுண்டு. அங்ஙனம் போர் கிளம்பினல் அவரவர் திறமைக்கேற்ப ரதத்தில் ஊர்ந்து செல்லுகிறவர்கள், யானையின் மீது இருந்து போர்புரிகிறவர்கள், குதிரையின் மீது அமர்ந்துகொண்டு விரைந்து பாய்ந்து தாக்குகிறவர்கள், அலைபுரண்டு வருவதுபோன்று நடந்துசென்று எதிரிகளைத் தாக்குகின்ற காலாட்கள் ஆகிய நான்குவிதப் படைகளும் அக்காலத்துக்கு ஏற்றவாறு போர்புரிந்தன.

அதே அம்பிகையின் ஆட்சி இன்றைக்கும் இலங்கி வருகிறது. இன்றைக்குப் போராட்டம் புதியதொரு வடிவெடுத்திருக்கிறது. நிலப்படை, நீர்ப்படை, விமானப்படை என மூன்று படைகளாக இன்றைக்குச் சேனையின் பலம் திகழுகிறது. நிலப்படை என்று இன்றைக்குச் சொல்லப்படுவது பழங்காலத்துச்சதுரங்க சேனை போன்றதன்று. உருண்டோடும் கோட்டைகளுக்கு நிகரான எந்திரங்கள் இன்றைக்கு அமைக்கப்பட்டிருக்கின்றன. ஒரு எந்திரத்தினுள் ஒருபோர்வீரன் அமர்ந்துகொண்டு பழங்காலத்துச் சதுரங்க சேனையை அறவே துடைத்துத்தள்ள வல்லவனுயிருக்கின்றான். அவ்வளவு தூரம் ராணுவத் துறையில் நிலப்படை முன்னேற்ற மடைந்திருக்கிறது. பழங்காலத்தில் கடல் கடந்து புற நாடுகளின் மீது யாரும் படையெடுத்துச் செல்லவில்லை. கடலுக்கப்பால் எங்கெங்கு என்னென்ன நாடுகளிருந்தன என்பதைப் பழங்காலத்தவர்கள் முற்றிலும் அறிந்திலர். ஆதலால் நீர்ப்படைக்கு அன்று தேவையேற்படவில்லை. இன்றைக்கோ கோட்டைகளுக்கு நிகரான யுத்தக் கப்பல்கள் அமைக்கப்பெற்றிருக்கின்றன. புற நாடுகளின் மீது கடல் கடந்து அவைகள் செல்லுங்கால் ஆங்குப் பிரளயத்தை உண்டு பண்ணுவதற்கான திறமை கடற்படையில் அமைந்திருக்கிறது. அதற்குமேல் உச்சஸ்தானம் பெற்றிருப்பது விமானப்படை. விமானங்களில் ஆகாயத்தில் பறந்து சென்று எதிரிகளின் ராஜ்ஜியங்களைச் சிறிதுநேரத்தில் சாம்பலாக்கி விடக்கூடிய திறமை விமானப்படை படைத்திருக்கிறது. ஆதலால் அம்பிகைக்கு இக்காலத்தில் பொருத்தமான நாமத்தை வழங்குதல் என்றால் த்ரயங்க பலேஸ்வரி எனப்பகர்வது பொருந்தும். மக்களின் முன்னேற்றத்திற்கு ஏற்ப அம்பிகைக்கு அமைந்துள்ள நாமங்களை மாற்றியமைப்பதும் பொருந்தும். எல்லாக்காலங்களிலும் உள்ள எல்லாவிதமான சேனைகளின் வல்லமைகள் யாவும் ஆதிசக்தியாகிய அன்னை பராசக்தியிடமிருந்து வடிவெடுத்து வந்தவைகளாம்.

*692.* **साम्राज्यदायिनि ஸாம்ராஜ்யதாயினி**- பேராட்சியைத் தருபவள் என்பது இந்த நாமத்தின் பொருள்.

அன்னை பராசக்தி பிரபஞ்சத்தின் நடை முறையை ஒழுங்குப்பாட்டுடன் செய்து வருகிறாள். அப்பேரமைப்பு அவளிடத்துப் பக்தி பூண்டிருக்கின்ற அனைவர்க்கும் சொந்தமாகின்றது. பக்தனொருவன் தனக்குரிய வாழ்வை முறையாகவும் ஒழுங்காகவும் நடாத்தி வருவானாகில் அவன் தன்னளவில் சாம்ராஜ்யத்தைப் பெற்றவனாகிறான். அடுத்தபடியாக அவனுக்குக் குடும்பம் ஒன்று வாய்க்குமிடத்து அதைச் செவ்வனே சமாளித்து வருவானாகில் அது சாம்ராஜ்யமாகிறது. ஒரு கிராமத்தில் வசிப்பவர்கள் ஒற்றுமையுடனும் ஒழுங்குப் பாட்டுடனும் ஊர் ஆட்சியை நிர்வகிப்பார்களாகில் அத்தகைய ஆட்சியை அந்த ஊருக்கு ஏற்ற வளவில் சாம்ராஜ்யமெனலாம். சிற்றரசன் ஒருவன் தனக்கமைந்துள்ள நாட்டைச் சீருடனும் சிறப்புடனும் ஆண்டு வருவானாகில் அவனுடைய ஆட்சி முறையைச் சாம்ராஜ்யமெனலாம். மன்னவர்கள் பலருக்கு மேலான மன்னன் ஒருவன் அமைவதுண்டு. அத்தகையவன் சக்கரவர்த்தி என்றோ, ராஜாதிராஜன் என்றோ போற்றப்பெறுகிறான். தன் ஆதிக்கத்தில் இருக்கும் அரசர்கள் எல்லாரையும் நல்வழியில் நடாத்தித் தானும் நல்வழி பிசகாது இருப்பானாகில் அவன் சாம்ராட் என அழைக்கப் படுகிறான். சிறிய அளவிலானாலும் சரி பெரிய அளவிலானாலும் சரி ஆட்சித் திறன் வாய்க்கப் பெற்றிருக்கிறவன் நிறைமனிதன் ஆகிறான். பரிபூரணமாகப் பாரமார்த்திக வாழ்வில் ஈடுபடுபவனுக்கே இத்தகைய மேலாம் பாங்கு வந்து வாய்க்கிறது. அதற்கு அம்பிகையின் உபாசனை இன்றியமையாத உபாயமாகிறது. பக்தனொருவனுக்கு உபாசனா மூர்த்தியின் விபூதிகளெல்லாம் சொந்தமாகின்றன என்பது கோட்பாடு. அகிலாண்டேசுவரியாகிய அம்பிகை அகிலாண்டங்களுக்கும் சக்கரவர்த்தினியாக இருந்து ஒழுங்குப்பாட்டை நிலவி வருகின்றாள். அத்தகைய பரமேஸ்வரிக்குப் பக்தர்களாக வாய்க்கிறவர்களுக்கு அவரவர் மனப் பான்மைக்கு ஏற்ப ஆளுந்திறமை வாய்ப்பதில் அதிசயம் ஒன்றுமில்லை. அம்பிகையின் உபாசகனுக்கு இகம் பரம் ஆகிய எல்லா நிலைகளிலும் மேன்மை வாய்க்கிறது என்பது கோட்பாடு.

**693. सत्यसन्धा சத்திய சந்தா**—ஆணை பிறழாதவள் என்பது இந்த நாமத்தின் பொருள்.

மகிமைகளோடு கூடிப் பிறப்பெடுக்கின்ற அவதார மூர்த்திகளுக்கும் சத்திய சங்கல்பன் என்னும் அடைமொழி பொருத்தமானதாக அமைகிறது. இக்கோட்பாட்டை

எண்ணிய எண்ணியாங் கெய்துப எண்ணியர்
திண்ணிய ராகப் பெறின்

எனப் பொய்யாமொழி அமைத்திருக்கிறது. சொன்ன சொல்லினின்று சான்றோர் ஒரு பொழுதும் பிசகமாட்டார்கள். தசரதராமனுடைய சரிதத்தை இதற்குச் சான்றாக எடுத்துக் கொள்ளலாம். பரதனும் அயோத்தி வாசிகள் அனைவரும் ஒன்றுகூடி ஸ்ரீ ராமனை அவனுக்குரிய ராஜ்யத்தை ஏற்றுக் கொள்ளும்படி வேண்டினார்கள். அவனைக் காட்டுக்கனுப்பிய கைகேயியின் மனமும் அதற்கேற்றவாறு திருந்தியமைந்திருந்தது. அன்னவர்களுக்கு ராமன் கொடுத்த விடையில் அவனுடைய பண்பாடு அமைந்திருக்கிறது. சூரியன் தன் பிரகாசத்தை இழக்கலாம், சமுத்திரம் நீரில்லாது வற்றிப் போகலாம், இமாசலம் இமம் அல்லது உறைபனி இல்லாது வெறும் மலையாய்ப் போகலாம், ஆனால் தந்தையைச் சத்திய சங்கல்பன் ஆக்குதல் பொருட்டுப் பதினன்கு வருஷகாலம் வனவாசம் செய்வேன் என்று தந்தைக்கு நான் செய்துள்ள பிரதிக்ஞையினின்று இம்மியளவும் பிசகேன் என்றான் ராமன். அன்னவனைச் சத்திய சந்தன் என இயம்பலாம். மானுடனொருவன் சத்தியத்தைச் சிக்கனப்பிடிப்பதற்கு நிகரான தபசு இல்லை. சத்தியமும் பரப்பிரம்மமும் ஒன்று. சத்தியத்தை உறுதியாகப் பிடிக்கின்றவன் பிரம்ம சொரூபம் ஆகின்றான். சத்தியம் காக்கின்ற பெருமக்கள் எல்லாரும் அன்னை பராசக்தியின் சொரூபங்களாக விளங்குகின்றனர். பரப்பிரம்மமும் பராசக்தியும் சொரூபத்தில் ஒன்றே. பரப்பிரம்மம் சத்திய சொரூபம் என்றால் அன்னை பராசக்தியும் அத்தகையவளே. அவளுடைய ஆணைக்கு அடிபணிகிறவர்கள் எல்லாரும் அவள் சொரூபத்தில் இடம் பெறுகின்றனர்.

# ஸத் ஸம்பாஷணை

**கேள்வி : (169) திரேதாயுகத்தில் இராமாயணத்தில் காணப்பெறும் பரசுராமரும், துவாபரயுகத்தில் மகாபாரதத்தில் பீஷ்மர், துரோணர், கர்ணன் ஆகியோருக்குக் குருவாக அமைந்த பரசுராமரும் வேறு வேறு மூர்த்திகளா ? அல்லது ஒரே மூர்த்திதானு ?**

இதிகாசங்களிலும் புராணங்களிலும் காணப்பெறும் சில மூர்த்திகள் சரித்திர பூர்வமான வியக்திகள் ஆகமாட்டார்கள். திரேதாயுகம் முடிந்து துவாபரயுகம் முடியும் வரையில் உள்ள காலவரையறையோ அளவில் அடங்காதது. அங்ஙனம் சில யுகாந்தரங்களுக்கு ஒரே உடல்தாங்கியிருக்கும் மூர்த்தி யாரையும் நாம் காண்பதில்லை. அப்படியிருந்தும் இந்த இரண்டு யுகங்களில் பரசுராமர் முக்கியமான இடம்பெற்று வருகிருர். இதன் உட்கருத்தை ஆராய வேண்டும். பரசுராமருடைய வரலாறே ஒருவிதத்தில் புராணங்களில் அடங்கியுள்ள கற்பனு மூர்த்திகளில் ஒருவராகத் தென்படுகிருர்.

இனி, பரசுராமரை இயற்கையின் கோர சக்தி சொரூபம் என வைத்துக் கொண்டால் இத்தகைய சக்தி எல்லா யுகங்களிலும் ஏதேனும் ஒரு விதத்தில் தாண்டவமாடி வருகிறது என்பது வெளியாகும். இந்தப் போக்கில் பொருள்படுத்துமிடத்தே உலக வரலாறுக்கு இது ஒத்துவருகிறது. தசரதராமன் அவதரித்த திரேதாயுகத்தில் பரசுராமரும் ஒருமுக்கியமான இடம்பெறுகிருர். அவருடைய கோபாவேசத்தைச் சமாளித்த தசரதராமனுடைய மகிமையை வெளிப்படுத்த அவர் உதவினர். அத்தகைய மூர்த்தி நெடிது வாழ்ந்திருந்து துவாபரயுகத்தில் மகாபாரதத்துக்குரிய சில பாத்திரங்களுக்கு நல்ல பயிற்சியைக் கொடுத்தார். பீஷ்மருக்கு அவர் கொடுத்த பயிற்சி குருவையே தூக்கியடிப்பதற்கான பெரிய பயிற்சியாக வடிவெடுத்தது. துரோணருக்கு அவர் கொடுத்த பயிற்சி மகாபாரதப் போரில் கேடுடைய துரியோதனனுக்குப் பேராதரவு தரக்கூடியதாக வடிவெடுத்தது. அதே விதத்தில் கர்ணனுக்கு அவர் கொடுத்த பயிற்சியும் துரியோதனனுக்கு ஆதரவாக வந்தமைந்தது. ஒருவிதத்தில் பீஷ்மருடைய வல்லமையும் துரியோதனனுக்கே பயன்பட்டது. ஆயினும் துரியோதனன் வெற்றியடையவில்லை. இதனின்று உண்மை ஒன்று வெளியாகிறது. இயற்கையின் அமைப்பில் பயங்கரமான நாசகாரி சக்தி ஒன்று இருக்கிறது. அது நல்லவர்கள் கெட்டவர்களாகிய எல்லாரையும் அழிக்கவல்லது. ஆயினும் நல்லவர்கள் அதனுடைய ஆக்கிரமிப்புக்கு இலக்காவதில்லை. இக்கொள்கையின்படி பரசுராமருடைய வல்லமை இக்காலத்திலும் இயங்கிக்கொண்டிருக்கிறது. ஏதேனும் ஒரு ஜீவாத்மாவின் வாயிலாகப் பரசுராமர் என்னும் இயற்கை சக்தி செயலில் இறங்கி இயற்கையின் போக்கை மாற்றியமைக்கிறது. இக்காலத்திய பூலோக வரலாற்றைப் புராணபூர்வமாகஎழுதினல் பரசுராமர் இக்காலத்தில் தம்முடைய பாங்கை நிறைவேற்றியிருக்கிருர் என்கின்ற முடிவுக்கு நாம் வந்தாக வேண்டும். அக்காலத்தில் அவர் ஒழித்துத் தள்ளிய அரசர்களெல்லாரும் அறங்காக்கத் தகுதியற்றவர்களாக இருந்தார்கள். பெரிய பதவிகளிலிருந்துகொண்டு பெரிய காரியங்களைத் திறமையுடன் நிறைவேற்றத் தகுதியற்றவர்களை இயற்கையின் நாசகாரிசக்தி துடைத்துத்தள்ளுவது எல்லாக் காலங்களிலும் நிகழ்கிற நிகழ்ச்சியாகும். புராண பூர்வமாகப் பகருமிடத்துப் பரசுராமர் படேல் என்னும் நாமம் தாங்கி கி. பி. 20 ஆம் நூற்ருண்டில் பரதகண்டத்தில் அவதரித்துத் தகுதியற்ற அரசர்களையெல்லாம் பதவியை விட்டுக் கீழிறக்கித் தள்ளினர் என்று இயம்பினல் புராணத்துக்கும் இது ஒத்திருக்கிறது, சரித்திரத்திற்கும் இது ஒத்திருக்கிறது.

ஆதலால் பரசுராமர் என்னும் மூர்த்தியை இயற்கைத்தாயின் நாசகாரி சக்தி என்று நாம் பொருள்படுத்தவேண்டும். இந்தச் சக்தியானது அழிந்துபட்டுப்போகாது சாஸ்வதமாக மண்ணுலக வாழ்வில் இடம் பெற்றிருக்கிறது. பயங்கரமான ஆயுதங்களைச் சில வீரர்களுக்குக் கொடுத்தருள வல்லதாக அச்சக்தி இருக்கிறது. இன்றைக்கு அணுசக்தி என்னும்

நாசகாரியாக ஒரு சிலர்க்குப் புகட்டப்பெற்றிருக்கிறது. இதை முறையோடு கையாண்டால் மக்கள் தீமையை அகற்றி நலனை நிலை நாட்ட முடியும். முறை தவறிக் கையாண்டால் கையாளுகிறவனுடைய கேட்டுக்கே அது முகாமையாகும். இந்தப் பாங்கில் பரசுராமர் என்னும் இயற்கையின் பேராற்றல் சிரஞ்சீவியாக நிலவுலகில் இடம் பெற்றிருக்கிறது. இந்தப்பாங்கில்தான் பரசுராமரை நாம் பொருள் படுத்தவேண்டும்.

கேள்வி: (170) **'துயரத்துக்குக் காரணம் அக்ஞானம்' என்பது ஒரு கோட்பாடு. எல்லார்க்கும் விளங்குகின்ற பாங்கில் இதைத் தெளிவுபடுத்தும்படி வேண்டுகிறோம்.**

தூக்கத்தில் ஒருவன் எதிர்பாராத கனவுகளைக் காண்கிறான். ஜாக்ரதாவஸ்தையில் மதிப்புக்குரியவனாக இருக்கிற மானுடனொருவன் சொப்பனாவஸ்தையில் அவமதிப்புக்கு ஆளாகிறான். தரத்தில் மட்டமானவர்கள் சிலர் அவனைத் திரஸ்கரிக்கின்றனர்; அவமானப் படுத்துகின்றனர். அவனைத் துன்பத்துக்காளாக்குகின்றனர். கனவில் துன்பப்பட்டுக் கொண்டிருக்கிறவனை யாரோ ஒருவர் தட்டி எழுப்புகின்றார். திடீரென்று விழித்து எழுந்திருக்கின்றான். கனவில் தான் பட்ட அவமானத்தைச் சிறிது விமரிசனம் பண்ணுகின்றான். அது வெறும் பொய்த்தோற்றம் என்று அதை ஒதுக்கி வைக்கின்றான். தான் உண்மையில் அவமானப்படவில்லை என்னும் தெளிவு அவனுக்கு உண்டாகிறது. கனவில் அவன் துன்பப்பட்டது அக்ஞானத்தின் விளைவு. நனவில் அவன் அதை ஒதுக்கித் தள்ளியது அதற்கேற்ற ஞானத்தைப் பெற்றதின் விளைவாம். ஜாக்ரதாவஸ்தையில் மனிதனுக்குத் தோல்வியுண்டாகிறது. அதனைக் குறித்து விசனப்படுகிறான். தோல்வியை அவன் உள்ளபடி ஆராய்ந்தால் அத்தோல்வியை மீளுவதற்கான உபாயத்தை விவேகத்தால் அவன் அறியவருகின்றான். ஜாக்ரதாவஸ்தையில் அவன் அடைந்துள்ள தோல்வியும் விசனமும் அக்ஞானத்தின் விளைவு. தெளிந்த விவேகத்தின் விளைவாக நேராக முயன்று அவன் வெற்றிபெற முடியும். இந்த ஞானம் அக்ஞானமாகிய இரண்டும் ஓரளவில்சீர்தூக்கப்படுகின்றன. அக்ஞானத்தையும் அதன் விளைவாகிய துயரத்தையும் துடைக்க வல்லது ஞானத்தெளிவு. இனி ஜாக்ரதாவஸ்தையிலேயே இம்மனிதன் அவமானத்துக்கு ஆளாகின்றான் என்று வைத்துக்கொள்வோம். அவன்பட்ட அவமானத்தை அவன் நிதானமாக ஆராய்ச்சி பண்ணினால்தான் அவமானத்துக்குரியவன் அல்லன் என்னும் தெளிவு அவனுக்கு உண்டாகிறது. ஞானத்தெளிவுக்கேற்ப வெற்றியைக் குறித்து மகிழ்வுறுவதும், தோல்வியைக் குறித்துத் துன்புறுவதும் பொருளற்றவைகள் என்னும் ஞானோதயம் அவனுக்கு வருகிறது. நிறை ஞானத்துக்குப் பக்குவமாகிக் கொண்டிருக்கிற ஆத்ம சாதகனொருவன் இவ்வுலக சம்பந்தமான வெற்றி தோல்வி, மானம் அவமானம், இன்பம் துன்பம் ஆகியவைகளுக்கு அப்பால்பட்டவனாகின்றான். ஆக துயரங்களனைத்திற்கும் மூலகாரணம் அக்ஞானம் என்பதும் நிறைஞானி ஒருவன் எக்காரணத்தை முன்னிட்டும் தனது நிஜானந்தத்திலிருந்து பிசகுவதில்லையென்பதும் நன்கு வெளியாகிறது.

உடல் எடுத்திருக்கிற ஒவ்வொருவனும் ஏதேனும் ஒருபோக்கில், ஏதேனும் ஒரு காலத்தில் நோய்க்கு ஆளாகக் கடமைப்பட்டிருக்கிறான். நோய்வாய்ப்படுகிற ஒவ்வொரு மனிதனும் அதைக் குறித்து வருந்துகிறான். கடவுளிடத்துப் பிரார்த்தனை பண்ணுகிறான். சிகிட்சைமுறைகளையும் கையாளுகிறான். கடவுளிடத்தில் பிரார்த்தனை பண்ணுவதில் குறையில்லை. பரிகாரத்தையும் எடுத்துக்கொள்ளலாம். ஆனால் வருத்தப்படுவது மட்டும் பொருந்தாது. அது அக்ஞானத்தின் விளைவு. நோயின் வாயிலாக உடல் திருத்தியமைக்கப் பெறுகிறது. இது உடலைப்பற்றிய உண்மை. அமைதியாக நோயை ஏற்றுக்கொள்ளுவதின் வாயிலாக உள்ளத்தில் அவன் திட்பம் அடைகிறான். இவ்வுண்மையை அறிகிறவன் விசனப்படுவதற்குப் பதிலாகச் சகித்துப் பழகுதல் என்னும் சாதனத்தைக் கையாளுகிறான். விசனப்படுவது அக்ஞானத்தின் விளைவு. சரியாக நடவடிக்கை எடுத்துக் கொள்வது ஞானத்தின் விளைவு. நோய் நல்லடைவது ஒருபுறமிருக்க மனத்திட்பம் அடைவது அவனுக்குப் பெரிய வாய்ப்பு ஆகிறது.

# நம்பிக்கையும் சரணாகதியும்

( சுவாமி ஆத்மானந்தர் )

மனிதன் தன் வாழ்க்கையில் கடவுளை அடைய நாள்தோறும் முயலவேண்டும். கடவுளை அடையும் பொழுதுதான் அவன் பேரானந்தத்தை அடையப் பெறுகிறான். கடவுளை முழு மனதோடு நேசிக்கின்ற மனிதன் கடவுளை அடையப் பெறுகிறான். கடவுளை அடைதல் கஷ்டமான காரியம் என்று நாம் கருதுகின்றோம். ஆனால், அனுபூதிமான்களில் ஒரு சிலர் ''ஐயே மெத்தச் சுலபம்'' என்று கூறி இருக்கின்றனர். வேறு சிலரோ ''ஐயே மெத்தக் கடினம்'' என்றும் கூறிச் சென்றிருக்கின்றனர். கடவுள் கருணையின் உறைவிடம். கருணையே வடிவெடுத்த கடவுளின் அருளைப் பெறுதல் சுலபமாகத்தான் இருக்கவேண்டும். அவனது கருணையினால்தான் நாம் உயிர் வாழ்ந்து வருகின்றோம். அவனது கருணையின் துணை கொண்டே அவனை அடைய முயலவேண்டும். ''அவனருளாலே அவன்தாள் வணங்கி'' என்கிறார் மணிவாசகப் பெருமான். கடவுளின் கருணையின் மிகுதியை எல்லாப் பெரியார்களும் புகழ்ந்து பேசுகின்றனர். பகவான் ராமகிருஷ்ணரும், ''கடவுளின் கருணை என்னும் காற்றானது இடைவிடாது வீசிக்கொண்டிருக்கின்றது. உனது மனமாகிய பாயை விரித்துக் கட்டு. அப்பொழுது நீயும் அவருடைய கருணைக்குப் பாத்திரமாவாய்'' என்று கூறியுள்ளார். ஆனால் கடவுளின் கருணையை யார் வேண்டுகிறார்கள்? கடவுளிடத்து யார் அன்பு செலுத்துகிறார்கள்? கடவுளை அடைய ஆவல் கொண்டு யார் திரிகிறார்கள்? மனிதன் எதைஎதையோ தேடியலைகிறான்! எதையெதையோ நாடி ஓடுகிறான்! உணவையும் உறக்கத்தையும் ஒதுக்கிவைத்துவிட்டு உலகப் பொருட்களுக்காக அல்லும் பகலும் அயர்வின்றி உழைக்கின்றான். நெற்றி வியர்வை நிலத்தில் விழப் பாடுபடுகிறான். மனைவி மக்களுக்காக முதுகெலும்பொடிய மூட்டை சுமக்கின்றான். பொன்னுக்கும், பொருளுக்கும், பெண்ணுக்கும் ஆசைப்பட்டுப் பித்தலாட்டங்கள் பல புரியத் தொடங்குகிறான். உலகப் பொருட்களுக்காக இத்துணை முயற்சிகளை எடுத்துக்கொள்ளுகின்றவன் கடவுளைக் காணுதற்காக ஏதாகிலும் முயற்சி எடுத்துக் கொள்ளுகிறானா? இல்லையென்றுதான் கூறவேண்டும். ''அழுதால் உன்னைப் பெறலாமே'' என்கிறார் மணிவாசகர். ஆனால் இறைவனுக்காக யார் அழுகிறார்கள்? மனைவி மக்களுக்காகக் குடம் குடமாகக் கண்ணீர் வடிப்பார்களே யொழிய கடவுளுக்காக ஒரு சொட்டுக் கண்ணீரும் சிந்தார்.

கடவுளை அடையப் பாடுபடுவதுதான் பெரும்பாடாக இருக்கிறது. யார் எதனை உள்ளன்போடு நாடுகிறார்களோ அதனை அவர்கள் அடையப் பெறுகிறார்கள். ''தேடுங்கள் கண்டடைவீர்'' என்பது இயேசுநாதர் வாக்கு.

**मय्येव मन आधत्स्व मयि बुद्धिं निवेशय ।**
**निवसिष्यसि मय्येव अत ऊर्ध्वं न संशयः ॥ 12-8**

''என்னிடத்தே மனதை வைத்து என்னிடத்துப் புத்தியைச் செலுத்துக. பின்பு என்னிடத்தே வசிப்பாய் என்பதில் சந்தேகமில்லை'' என்று தம்மை அடைதற்குரிய உபாயத்தைக் காட்டித்தருகிறார் கிருஷ்ண பரமாத்மா. மனம் புத்தியை ஈசனிடத்துச் செலுத்தவேண்டும். நெஞ்சத்தால் ஈசனை நினைத்தல் வேண்டும். மனதை ஈசன் குடியிருக்கும் கோயிலாக்க வேண்டும். நினைப்பவர் மனமே கோயிலாக் கொள்பவன் இறைவன். யார் தன்னை அன்பினோடும் ஆர்வத்தினோடும் நினைக்கின்றார்களோ அவர்களுடைய இதயங்களில் எழுந்தருளி அவ்விதயங்களைச் சொந்தமாக்க விழைபவன் ஈசன். அன்பர்களுடைய இதயங்களில் வாசம் செய்வது ஈசனுக்குப் பிடித்தமானது. நாம் அன்பினோடு அழைக்க வேண்டியதுதான், அவன் உடனே நம்பால் எழுந்தருளிவிடுவான். அடியார்க்கு எளியவன் இறைவன். இவ்வளவு எளியனாய் இருப்பதை அறிந்திருந்தும் நாம் அவனை நம்மவனாக்க முனைகின்றோமில்லை. உலகத்துக் குப்பை கூளங்களையெல்லாம் இதயத்தில் போட்டு நிரப்பி வைத்திருக்கின்றோம். ஒன்றுக்கும் உதவாத விதவிதமான எண்ணங்களுக்கெல்லாம் இதயத்தை உறைவிடமாக்கி வைத்திருக்கின்றோம். ஈசன் குடியிருக்கும்

கோயிலே மாயை குடியிருக்கும் கொட்டிலாக்கி விட்டோம். மாயைதான் நம்மீது ஆதிக்கம் செலுத்துகின்றது. ஈசனுக்கு அன்பராய் இருந்து தொண்டு செய்தற்குப் பதிலாக மாயையின் அடிமையாய் இருந்து தொண்டு செய்து வருகின்றோம். ஈசனை நினைக்க முடியாதஅளவிற்கு மாயையின் ஆதிக்கம் நம்மீது செலுத்தப்படுகின்றது. இந்த மாயையின் ஆதிக்கத்திலிருந்து நாம் விடுபட்டாக வேண்டும். மாயை என்பது யாது? அது எந்த ரூபத்தில் நம்மீது ஆதிக்கம் செலுத்துகின்றது என்பதை அறிந்துகொள்ளவேண்டும்.

மாயை பல்வேறு வடிவங்கொள்ளவல்லது. அது வெவ்வேறு மனிதர்களிடத்து வெவ்வேறு வடிவங்களில் வரும். மனிதனுடைய பல வீனத்தை அறிந்து அதற்கேற்ப அது தன் வடிவத்தை மாற்றிக்கொள்ளும். பெரும்பாலும் அது காம காஞ்சன வடிவங்களை எடுத்து மனிதரை மயக்கும். காம காஞ்சனத்திற்கு வசப்பட்ட மனிதன் ஈசுவர சிந்தனையை மறந்து விடுகின்றான். புலனின்பத்தில் கட்டுண்ட மனிதன் இறையின்பத்தைப் புறக்கணித்து விடுகின்றான். நம்மில் பெரும்பாலோர் இந்திரிய இன்பத்தில் கட்டுண்டவர்களாகத்தான் இருக்கின்றோம். பஞ்சேந்திரியங்களைத் தாண்டிச் செல்ல நம்மால் இயலுவதில்லை. எளிதில் அகப்படுகிற இந்திரிய இன்பத்தில் மயங்கி எல்லையற்ற பேரானந்தத்தை எட்ட முடியாது நின்று விடுகின்றோம். ஐம்புலன்களுக்கு அப்பாற்பட்டவன் இறைவன். புலனின்பத்தைப் புறக்கணித்துத் தாண்டிச் சென்றாலொழிய இறையின்பத்தை அனுபவிக்க இயலாது. இந்த உண்மையை நாம் முதலில் அறிந்து கொள்ளவேண்டும். பஞ்சேந்திரியங்களை அடக்கிப் பழகவேண்டும். புலனடக்கம் பயிலாது மனதை ஈசன்பால் செலுத்தவொண்ணாது. புலனின்பத்தைப் புறக்கணித்தாலன்றி இறையின்பத்தில் நாட்டம் கொள்ள இயலாது. பகவானிடத்துப் பக்தி பெருகுதற்குப் புலனடக்கம் முதற்படியாகும். ஆத்ம சாதனம் புலனடக்கத்தில்தான் தொடங்குகிறது. கண்டதைத் தின்னுபவன், கண்டதைக் காணுபவன், கண்டதைக் கேட்பவன், கண்டதை மோப்பவன், கண்டதைத் தீண்டுபவன் கடவுள் நாட்டம் கொள்ளத் தகுதியற்றவனாவான். இந்திரிய நிக்ரஹம்தான் மனிதனை நிறைஞானி யாக்குகிறது. ஐம்புலனடக்கம்தான் மனிதனை ஆத்ம ஞானியாக்குகிறது.

**यदा संहरते चायं कूर्मोऽङ्गानीव सर्वशः।**
**इन्द्रियाणीन्द்रियार्थेभ्यः तस्य प्रज्ञा प्रतिष्ठिता ॥**

''ஆமை தன் அவயவங்களை அடக்கிக்கொள்வதுபோல் பொருள்களிடத்திருந்து பொறிகளை முழுதும் உள்ளிழுக்க வல்லவனுக்கு நிறை ஞானம் நிலை பெறுகிறது'' என்பது கீதா போதனை. ஈசனை அறிதற்கு ஐம்புலன்கள் பயன்படா. உலகனைத்தும் ஈசன் மயமாய் இருப்பினும் ஐம்புலன்களுக்கு அறியப்படாது அப்பாற்பட்டவனாய் அவன் இருக்கின்றான். இந்தப்பேருண்மையை மணிவாசகப்பெருமான், ''அனைத்துலகும் ஆய நின்னை ஐம்புலன்கள் காண்கிலா'' என்று ஈசனைப் போற்றுமுகத்தான் நமக்குப் புலப்படுத்துகின்றார்.

ஈசன் ஒருவனே பரிசுத்தமானவன். மாசுமறுவற்றவன். அவனை யாரும் அசுத்தப்படுத்திவிட முடியாது. ஈசன் மனிதனுடைய மனம், மொழி, மெய்க்கு எட்டாதவன். கருவிகரணங்களுக்கு அப்பாற்பட்ட ஒருவனை அசுத்தப் படுத்துவது எப்படி? அவனை முற்றிலும் அறிந்தோர் யாருமில்லை. வேதங்களெல்லாம் ஈசனைப் பற்றிய ஏகதேச உண்மைகளைத்தான் எடுத்து விளக்குகின்றன. ஈசனது மகிமை முழுதையும் வேதங்கள் வெளிப்படுத்தி விட்டன என்று எண்ணிவிடலாகாது. 'ஈசன் ஒருவனே எச்சில் படாதவன்' என்கிறார் பகவான் ராமகிருஷ்ணர். பஞ்சபூதங்கள் தோறும் பரவி நிற்கின்றான் எனினும் அவனை யாரும் உள்ளது உள்ளபடி கண்டதில்லை. அண்டகோடிகள் அனைத்தும் அவனது அம்சத்தின் ஒரு சிறு பகுதியே யாகும். இறையின்பத்தின் வெறும் நிழல்தான் இப்பிரபஞ்சம். இந்தப் பிரபஞ்சத்தைத் தாண்டிச் சென்றால்தான் இறையின்பத்தை அனுபவிக்கமுடியும். ஆண்டவனின் பொருட்டு அனைத்தையும் விட்டு விடு. இந்த உலகத்தை உன்னுடைய உள்ளத்தினின்றும் உதறி எறிந்து விடு. இதனை வாந்தியெடுத்த ஆபாசப் பொருளாகக் கருதித் துப்பிவிடு. உலகப் பொருட்களிடத்திருந்து உன் புலன்களை உள்ளிழுத்துக்கொள். உனது மனதையும்

புலன்களையும் ஆண்டவனை நோக்கித் திருப்பு. உள்ளத்தினுள்ளே கோயில் கொண்டிருக்கும் இறைவனை ஆழ்ந்து நினை. புறவுலகில் புலனின்பத்தைத் தேடாதே. அகவுலகில் ஆத்மானந்தத்தைத் தேடு. உண்பதிலும், உறக்கத்திலும் இன்பத்தை நாடாதே. தியானத்திலும், மோனத்திலும் இன்பத்தை நாடு. தியானமும் மோனமும் ஞானத்தை நல்கிப் பேரின்பத்தில் நம்மை ஆழ்த்தும்.

மோனந் தருஞான மூட்டி எனக்குவட்டா
ஆனந்த வாழ்க்கை அருளாய் பராபரமே

என்று தாயுமானவர் பரத்தினை நோக்கிப் பிரார்த்திக்கின்ருர்.

இறைவன் ஒப்புயர்வற்றவன். அவனைச் சரணடைந்தாலன்றித் துன்பதுயரங்கள் அனைத்தினின்றும் விடுபட முடியாது. எல்லாவற்றையும் அவனிடத்து ஒப்படைத்துவிட வேண்டும். நதி கடலில் சங்கமமாவது போன்று நமது ஜீவபோதம் பரபோதத்தில் சங்கமமாகிவிட வேண்டும். நமக்கென எதுவுமின்றி எல்லாம் ஈசன் மயமாய்விடவேண்டும். அதுவே சரணகதி எனப்படுகின்றது.

सर्वधर्मान्परित्यज्य मामेकं शरणं व्रज ।
अहंत्वा सर्वपापेभ்यो मोक्षयिष्यामि मा शुचः ॥

"தர்மங்களையெல்லாம் அறவே தியஜித்துவிட்டு என்னையே சரணடைக. பாபங்களனைத்தினின்றும் உன்னை நான் விடுவிப்பேன் ; வருந்தாதே" என்பது கண்ணபிரான் வாக்கு. என்னைச் சரணடை ; பாபங்கள் அனைத்தினின்றும் உன்னை விடுவிப்பேன் என்று கண்ணன் நமக்கு உறுதி கூறுகிருர். இதைவிட நமக்கு வேறு என்ன வாக்குறுதி வேண்டும்? எதுவும் தேவையில்லை. முழு மனதோடு அவனது திருவடியில் சரணடைதல் வேண்டும். அவனது கருணையினுல் எல்லையற்ற சாந்தியையும், சாஸ்வதமான பரமபதத்தையும் நாம் பெற்றுவிடலாம். நம்மிடத்துச் சிரத்தை இருக்கவேண்டும். ஈசனிடத்து நம்பிக்கை இருக்கவேண்டும். பின்னர் நாம் அஞ்சுவதற்கு யாதொன்றுமில்லை. ஆன்மீக உலகில் முன்னேற்றம் அடைவதற்குச் சிரத்தை மிகமிக இன்றியமையாததாகும். நசிகேதன் எவ்வாறு ஞானத்தை அடையப்பெற்ருன் என்பதைக் கடோபநிஷத்தில் காணுகின்ருேம். யோகி, ஞானி, பக்தன் ஆகியோர் அனைவருக்கும் சிரத்தை இன்றியமையாதது. எந்த மார்க்கத்தைப் பின்பற்றினுலும் சிரத்தையின்றி முன்னேற்றமடைய முடியாது. கீதையிலும் श्रद्धावाँल्लभते ज्ञानं — "சிரத்தை உடையவன் ஞானத்தைப் பெறுகிருன்" என்று கூறப்பட்டுள்ளது. ஒருவனுக்கு ஞானம் எப்பொழுது வந்து வாய்க்கிறதோ அப்பொழுதே அவன் மிகவுயர்ந்த சாந்தியைப் பெறுகிருன்.

'சந்தமாமா எல்லாருக்கும் சந்தமாமா தான்' என்பது வங்காளப் பழமொழி. இறைவன் எல்லார்க்கும் சொந்தமானவன். அவன் யாருக்கும் தனியுடைமையன்று. அவன் எல்லாருக்கும், எல்லா உயிர்களுக்கும் சொந்தமானவன். இதுபற்றி நாம் ஐயப்பட வேண்டியதில்லை. இறைவன் நமக்குச் சொந்தம். நாம் இறைவனுக்குச் சொந்தம். இதில் ஆழ்ந்த நம்பிக்கை வேண்டும். உண்மை இவ்வாறிருக்க நம்மை ஏன் பலவீனர்களாகக் கருதவேண்டும்? நாம் ஏன் துன்ப துயரங்களைக் கண்டு மூலையில் உட்கார்ந்து ஓலமிட வேண்டும்? நாம் அனைவரும் அன்னை பராசக்தியின் அன்புக் குழந்தைகளாவோம். அவளுடைய குழந்தைகளுக்குப் பலத்திற்குப் பஞ்சமிராது. அவளுடைய அருளினுல் எல்லையற்ற ஆன்ம சக்தி நம்முள் வந்துசேரும். இந்த உணர்வோடு முடிவற்ற பலத்தை நமக்குரியதாக்க வேண்டும். அவள் உண்மையான அன்னையாவாள். வெறும் தோற்றம், கற்பனை என்று கருதிவிடலாகாது. மனிதன் எதை நினைக்கிருனே அதுவாகிருன். நம்மை நாம் பலவான்களாகக் கருதினுல் பலவான்களாவோம். நம்மை நாம் பலவீனர்களாகக் கருதினுல் பலவீனர்களாவோம். ஆண்டவனின் குழந்தைகளாகிய நாம் நம்மை ஏன் பலவீனர்களாகக் கருதவேண்டும்? இறைவனுடைய கருணையின் துணைகொண்டு நம்மால் செய்ய இயலாதகாரியம் என்பது எதுவுமில்லை. நான் எனது என்னும் எண்ணத்தை விட்டுவிட வேண்டும். நான் எனது என்னும் எண்ணத்தை விடாது பற்றிப் பிடித்துக்கொண்டிருக்கும்பரியந்தம் நம்மால் அரும்பெரும் காரியங்களைச் செய்ய இயலாது. இறைவனது அருளினுல் அவைகளினின்று விடுபடவேண்டும்.

உண்மையில் நான்என்ருே எனதுஎன்ருே சொல்லுதற்கு மனிதனுக்கு உரிமையில்லே. அறியாமைதான் அவனே அவ்வாறு சொல்லும்படி செய்கிறது. நான் என்பது ஈர வெங்காயம் போன்றதென்ருர் பகவான் ராமகிருஷ்ணர். நான் என்பதற்கு இலக்காக இருப்பது நம்மிடத்து எதுவுமில்லே. இல்லாத ஒன்றை இருப்பதாகக் கற்பனே செய்கிருேம். எனது என்று சொந்தம் கொண்டாட இவ்வுலகில் என்ன இருக்கிறது? உண்மையில் நமக்குச் சொந்தம் இவ்வுலகில் எதுவுமில்லே.

"உற்ருராருளரோ உயிர்கொண்டு போம் [பொழுது
குற்ருலத்துறை கூத்தனல் லால்நமக்கு உற்ருர் [ஆருளரோ"

என்பது வாகீசப்பெருமான் திருவாக்கு. ஈசனே வணங்கி வாழ்த்த வேண்டும். அவனே வணங்குகின்ற அளவிற்கு மயக்கங்கள் அனேத்தினின்றும் விடுபடுகின்ருேம். மயக்கத்தைத் தீர்க்கும் மருந்தாக இருப்பவன் ஈசன். வைத்தியர்களுள் மிகப்பெரிய வைத்தியனுக இருப்பவன் ஈசன். தன்னேச் சார்ந்து நிற்பாரது மயக்கத்தை அறவே நீக்கவல்லவன் அவன்.

"மதியங்கண்ணி ஞாயிற்றை மயக்கந்தீர்க்கு [மருந்தினே
அதிகைமூதூர் அரசினே ஐயாறமர்ந்த ஐயனே
விதியைப் புகழை வானேர்கள் வேண்டித் [தேடும் விளக்கினே
நெதியைஞானக் கொழுந்தினே நினேந்தேற் [குள்ளம் நிறைந்ததே"

என்பது அப்பர் தேவாரம்.

ஆணவ அகங்காரம் நம்மை ஈசனிடத்திருந்து பிரித்து வைக்கின்றன. அவற்றை அகற்றுவது சுலபமான காரியமன்று. அரசமரத்தின் கிளேகளே வெட்ட வெட்ட அவை தளிர்த்துக் கொண்டே இருக்கும். அதன் வேரை அடியோடு பறித்தெறிந்தாலன்றி அது பட்டுப் போகாது. பற்றின்மை என்ற கோடரியினுல் அகங்கார மமகாரங்களே அடியோடு வெட்டியெறிய வேண்டும். அகங்கார மமகாரம் அழியப் பெற்றவன் ஆண்டவனேச் சரணடைகின்ருன். அவனுக்கென்று யாதொன்றும் இல்லாது போய்விடுகின்றது. அவன் யாண்டும் தெய்வத்தைச் சார்ந்திருந்து செயல் புரிகின்ருன். அவனுடைய இச்சை என்பது தெய்வத்தின் இச்சையாகவும், அவனுடைய செயல் என்பது தெய்வத்தின் செயலாகவும் இருக்கின்றன. இறைவன் திருவுள்ளப்படி இயங்கி வருகின்ருன். நலம் கேடு, உற்ருர் வேற்ருர், சுக துக்கம், குளிர் வெப்பம், புகழ்ச்சி இகழ்ச்சி ஆகிய இருமைகளெல்லாம் அவன் மனத்தகத்தினின்று அகன்றுவிடுகின்றன. எல்லாம் அவனுக்குத் தெய்வந்தான். எல்லாச் செயல்களும் அவனுக்குத் தெய்வச் செயல்கள்தாம். எல்லா உருவங்களும் அவனுக்குத் தெய்வத்தின் திருவுருவங்கள்தாம். எல்லாக் காட்சிகளும் அவனுக்குத் தெய்வத்தின் திருக்காட்சிகள்தாம். எல்லா இடங்களும் அவனுக்குத் திருச்சந்நிதிகள்தாம். இறைவன் அவனே எங்கு வைக்கிருனே அங்கு அவன் ஆனந்தமாக இருக்கிருன். மாடமாளிகையில் வைத்தாலும், மரத்தடியில் கிடத்தினுலும் அவன் ஆனந்தமாகவே இருக்கின்ருன். காடும் வீடும் அவனுக்கு ஒன்றுதான்; ஓடும் செம்பொனும் அவனுக்கு ஒன்றுதான்; ஆணும் பெண்ணும் அவனுக்கு ஒன்றுதான்; அழகும் அழகின்மையும் அவனுக்கு ஒன்றுதான்; நரகமும் சொர்க்கமும் அவனுக்கு ஒன்றுதான்; வாழ்வும் மரணமும் அவனுக்கு ஒன்றுதான். இருமைகள் அனேத்துமே அவனுக்கு ஈசன் திருவடிகள்தாம். இருமைகளேயெல்லாம் தாண்டிய பெருநிலேயில் ஈசன் திருவடித் தாமரையிலேயே அவன் வாழ்ந்து வருகின்ருன். தெய்வச் சிந்தனேயிலேயே அவன் யாண்டும் திளேத்திருக்கின்ருன். மனம், மொழி, மெய்யினுல் ஈசனது பூசனேயை இடையருது இயற்றிப் பரமானந்தத்தில் திளேத்திருக்கிருன். இதுவே பக்தன் அடைகின்ற பெரும்பேருகும்.

கொள்ளேன் புரந்தரன் மால் அயன்
வாழ்வு குடி கெடினும்
நள்ளேன் நினது அடி யாரொடு
அல்லால் நரகம்புகினும்
எள்ளேன் திரு அருளாலே
இருக்கப்பெறின் இறைவா
உள்ளேன் பிறதெய்வம் உன்னே அல்லாது
எங்கள் உத்தமனே.

— திருவாசகம்.

# உண்மையான வைஷ்ணவன் யார்?

(சுவாமி துருவானந்தர்)

[ 193ஆம் பக்கத் தொடர்ச்சி ]

**"எவன் சமநோக்கு உடையவனோ, வேட்கையை விட்டொழித்தவனோ, பிற மாதர்களைத் தாயாக வணங்குபவனோ, எவன் பொய்யே பேசமாட்டானோ அவனே உண்மையான வைஷ்ணவன் ஆவான்."**

உலகம் தோன்றிய நாள் முதல் இன்று வரை சமத்துவம் வேண்டும் என்று எங்கும் பேசப் படுகிறது. எதையும் சமமாகப் பார்க்கும் தன்மை எளிதாக வரக்கூடியதா? உலகினர் ஒவ்வொருவரும் பந்தபாசங்களுக்கு அடிமைப் பட்டவர்களாக இருக்கின்றனர். பற்றுள்ள இடத்தில் விருப்பு வெறுப்பு இருக்கும். விருப்பு வெறுப்பு உள்ள இடத்தில் சம நோக்கை எங்ஙனம் காணமுடியும்? சமத்துவம் பற்றியும், சமநோக்குப் பற்றியும் வாய்கிழியப் பேசுகிறவர்களுக்கும் பணம், பதவி முதலியன வரும்பொழுது அவை இருந்த இடம் தெரியாது போய்விடும். சாமான் தூக்கிவரும் கூலியாளி டம் காசுக்காக மணிக்கணக்கில் சண்டை போடும் நபர்களையும் சமுதாயத்தில் காணு கிறோம். இறைவன் முன்னிலையில் அனைவரும் சமம் என்று வேதங்கள் முழங்குகின்றன. வழிபாட்டுக்காக பக்தர்கள் ஆலயத்தில் குழுமி யுள்ளனர்; அப்போது உயர் அதிகாரிகளோ, சமூகத்தில் பெரிய அந்தஸ்து வாய்க்கப் பெற்றவர்களோ கோயிலினுள் நுழைந்தவுடன் இவர்களின் பொருட்டு ஏனைய பக்தர்களனை வரும் காத்திருக்கவேண்டியுள்ளது. வழிபாட் டுக்கூடத்தில் கூட சமநோக்கைக் காண முடியவில்லையே! பட்டினி கிடக்கும் தன் குழந்தைகளுக்காகத் திருடுகிறான் ஒருவன். அவன் குற்றவாளி எனத் தீர்ப்பளிக்கப்பட்டு அவனுக்குச் சிறைத்தண்டனை விதிக்கிறது நீதி மன்றம். சிறையில் கிடந்து கடும் வேலைசெய்து, கொடுப்பதை உண்டு வாழ்ந்து வருகிறான். ஆனால் பணபலமிக்கவன் கொலைக் குற்றம் சாட்டப்பட்டுச் சிறையிலே சொகுசு வாழ்க்கை வாழுகிறான். அறுசுவை உண்டி வேளை தவறாது வருகிறது. பொழுது போக்க ரேடியோ, பத்திரிகை படித்தல் முதலிய வசதிகள் அவனுக்குமட்டும் ஏன் அமைய வேண்டும்? இது குற்றத்துக்கு ஏற்ற தண் டனையா? அந்தஸ்திற்கு ஏற்ற தண்டனையா?

தவறு செய்த தனயனுக்குத் தண்டனை தரத் தீர்மானித்தான் நீதி தவறாத மன்னனொருவன். தனது ஆட்சியில் பசுவுக்கு நேர்ந்த துயரை அறிந்து அதன் கன்றினைக் கொன்ற தன் குமாரனை அதே ரதத்தில் ஏற்றிக்கொல்ல முயன்றானே அவனுடைய நீதி தவறாத தன் மையை என்ன வென்பது! ஆனால் இன்றோ நாட்டை ஆளத் தலைவர்களாக வருகிறவர் களின் பிள்ளைகள் தவறு செய்தால் அந்தத் தவறை மூடி மறைத்து மக்களின் கவனத்தைத் திசைதிருப்பிவிடுகின்ற சாமர்த்தியசாலிகளாக விருக்கின்றனர். தனக்கு ஒரு நீதி, மற்றவர்க ளுக்கு ஒருநீதி என்ற மட்டரகமான கொள்கை மனதில் புகுந்ததால் நாட்டைக் கீழான நிலைக்குக்கொண்டுவந்துவிட்டார்கள். தந்தை யொருவன் சமநோக்குப் படைத்திருந்தால் அவ னுடைய குடும்பம் அமைதியாக நடைபெறும். அங்ஙனம் நாட்டுக்குத் தலைவன் சமநோக்குப் படைத்தவனாக இருந்தால்தான் அரசாங்க நிர்வாகம் முறையாக நடைபெறும். அதைக் கண்ணுறும் மக்களும் மன மகிழ்ச்சியோடு தங்கள் வாழ்க்கையை நடாத்திச் செல்வார் கள். சமநோக்குப் படைத்தவர்களில் நமக்கு நல்ல சான்றாகத் திகழுகிறார் யுதிஷ்டிரன். மகா பாரத யுத்தம் முடிந்தான பிறகு, மாயக் கண்ணன் மறைந்தான பிறகு உலக வாழ்க்கை யில் வெறுப்புற்ற பாண்டவர்கள் கண்ணனைத் தேடிச் சொர்க்கம் செல்லுகின்றனர். இமய மலை வழியாக மலைமீதேறிப் பாண்டவர்கள் ஐவரும் திரௌபதியோடு சென்றார்கள். வழி யில் சகோதரர் ஒவ்வொருவரும் கீழே வீழ்ந்து மாண்டனர். அவர்களைச் சற்றும் கண்ணெடுத் துப்பார்க்காத தருமன் முன்னேக்கிச் சென்று கொண்டிருந்தார். அவரோடு ஒரு நாயும் தொடர்ந்து வெகுதூரம் வந்தது. அவர்களை வரவேற்கப் புஷ்பக விமானம் ஒன்று ஆங்கு வந்தது. அதில் வந்த தேவன் ஒருவன் தர்மனை

விமானத்தில் ஏறி அமரும்படி வேண்டினன். அவரோடு உடன் வந்த நாயும் அதில் ஏற முயன்றது. வந்தவன் நாயைச் சொர்க்கத்திற்குக் கொண்டுசெல்ல மறுத்தான். அப்போது தர்மன், "என்னையே நம்பி என்னோடு இவ்வளவு தூரம் வந்த இந்த நாய்க்குச் சொர்க்கத்தில் இடம் இல்லையென்றால் அந்தச் சொர்க்கம் எனக்கு வேண்டாம்" என்று தானும் அவ்விமானத்தில் ஏற மறுத்துவிட்டான். ஓர் அல்ப நாய்தானே என்று அதை நாம் புறக்கணித்துவிடலாம். ஆனால் தர்மனோ நாயோடு தம்மை அபேதப்படுத்திக்கொண்டார். அவருடைய சமதிருஷ்டியைக் கண்டு வியந்த தர்மதேவதை தன் நாய் வடிவத்தைக் கலைத்து அவர் முன்னே தோன்றியது. சமமாகப் பார்க்கும் தன்மைக்கு நல்ல முன்மாதிரியாக, உண்மையான வைஷ்ணவனுக்கு நல்ல எடுத்துக்காட்டாக வாழ்ந்தார் தர்மன். அவருடைய வழியைப் பின்பற்றும் மானுட சமுதாயம் யாண்டும் க்ஷேமமாக வாழ்ந்துவரும்.

வீதியின் ஓரத்தில் நின்றுகொண்டு அக்கம் பக்கம் நோட்டம் விட்டால் வியத்தகு காட்சிகள் வந்துபோகும். ஒருவேளை உணவுக்காகக் கடையும், வீடுமாகக் கால் கடுக்க நடந்து, கிடைத்ததை உண்டு, உயிர்வாழும் ஏழைகளின் சாம்ராஜ்யத்தைச் சாலையோரங்களில் காணலாம். இது ஒரு காட்சி. கல்வி கற்றும் வேலை கிடைக்காத வேதனையில் யார் யாரோ சொல்லிய சொல்லில் நம்பிக்கை வைத்து அங்குமிங்கும் அலைந்து அலுத்துப் போன இளைஞர் கூட்டம் இன்னொரு பக்கம். இது மற்றொரு காட்சி. உணவுக்காகவும், அவ்வுணவை வாங்கும் பொருளுக்காகவும், அப்பொருளைப் பெற்றுத்தரும் வேலைக்காகவும் வேட்கைகொண்டு அலைவதைக் காண்பதில் விசித்திரம் ஒன்றுமில்லை. உண்ண உணவிருந்தும், சீராகச் செலவழிக்க செல்வமிருந்தும், பகட்டான வாழ்க்கை வாழப் பதவிகளிருந்தும் இன்னும் வேறு வகையான வேட்கைகளை மனத்தில் வளர இடம் கொடுத்து வேட்டை நாய்களைப் போல அலையும் சில மனிதரைக் கண்டால்தான் விசித்திரமாக இருக்கும், அதோடு வேதனையாகவும் இருக்கும். மானுட இனத்தில் எத்தனை மனப்பான்மையோ அத்தனை வேட்கைகள் அவரவர் உள்ளங்களில் ஊறியிருக்கின்றன. காமவேட்கை, சினிமாவேட்கை, சூதாட்டவேட்கை நாவல்படிக்கும் வேட்கை, குடி வேட்கை, கும்மாள வேட்கை என்ற எத்தனையோ வேட்கைகள் ஒவ்வொருவர் உள்ளத்திலும் படிந்து அவரவரை உருக்குலைத்து ஒன்றுக்கும் உதவாத செத்தபிணங்களாக ஆக்குகின்றன. இப்படிப்பட்ட எத்தனையோ கெட்ட பழக்க வழக்கங்களின் கையில் சிக்கிக்கொண்டு மீளமுடியாது தவிக்கும் சில மனித ஜன்மத்தைக் கண்டு மனம் கலங்காமல் இருக்க முடியாது. புயலுக்குப் பிறகு அமைதி தோன்றுவது போன்று நெறி கெட்டுக் கீழே வீழ்ந்த பிறகுதான் மனதில் தெளிவு பிறக்கிறது. அப்போது சாந்தியைத் தேடுகிறது மனது. இறைச் சிந்தனை ஒன்றே மனதுக்கு அமைதியை ஊட்டவல்லது. மனதுக்கு ஆறுதல் தரவல்ல ஆத்மீக விஷயங்களில் இறுதியாக வேட்கை ஏற்படுகிறது. இந்த அருள் வேட்கைதான் இறைவனருகே அழைத்துச் செல்லுகிறது. இல்லறமானாலும் சரி, துறவறமானாலும் சரி வேட்கையை விட்டொழித்த வாழ்க்கையே விரும்புவதற்குரிய வாழ்க்கையாகும். ஸ்ரீ ராமகிருஷ்ணருக்குச் சில இல்லற சிஷ்யர்கள் இருந்தார்கள். அவர்களில் முதன்மை ஸ்தானம் பெற்றவர் நாகமகாசயர் என்ற மகான் ஆவார். மணம் புரிய விரும்பாத அவரை மணம் புரிந்து உலகுக்கு முன்மாதிரியாக வாழும்படி கூறினர் பரமஹம்சர். மணம் புரிந்த பிறகும் பரமஹம்சரைப் போன்று தவ வாழ்க்கை வாழ்ந்தார். வேட்கையை எல்லாம் வெந்து சாம்பலாகப் போகும்படி செய்து விட்டார். வேட்கையை எல்லாம் விட்டொழித்த அந்த வித்தகர் உண்மையான வைஷ்ணவனுக்கு முன்மாதிரியாகத் திகழ்ந்தார்.

மதுவைக் குடித்தால்தான் மயக்கம் வரும் ஆனால் மங்கையை நினைத்தாலே சாதாரண உள்ளங்கள் தடுமாறித் தத்தளிக்கும் என்கிறார் வள்ளுவர். உலக வாழ்வைத் துறந்தும் மன அலைச்சலை அடக்க இயலாது மணம் புரிந்து அதிலே கட்டுப்பாட்டினைக் கடைப்பிடித்து மாபெரும் ரிஷிகளாக மாறியமைந்தனர் பலர். பராசரர், வியாசர், வசிஷ்டர் முதலாயினோர்

அந்த வகையைச் சேர்ந்தவர்கள். பெண்ணைப் பற்றிய எண்ணத்தை உள்ளத்திலிருந்து அறவே துடைக்க முயல வேண்டுமே தவிர பெண் இனத்தையே இழித்துப் பேசுவது சரியான செயல் ஆகாது. ‘பெண்களே பெரும் பேயடா’ என்று இடைக்காலத்தில் சிலர் கொண்டிருந்த கொள்கைக்கு முற்றுப் புள்ளி வைக்கும் பாங்கில் நிகழ்ந்தது ராம கிருஷ்ண அவதாரம். ‘பெண்களைப் பேய், எமன் என்றெல்லாம் கூருதே. அம்பாள் ஜகன்மாதா இந்த வடிவம் தாங்கி உன் முன் காட்சி அளிக்கிருள் என்ற எண்ணத்தோடு பார்’ என்ற புதிய கொள்கையை மக்களுக்கு அளித்தார்.

ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சரிடம் பக்தர்கள் பலர் கேள்வி ஒன்று கேட்டனர். உள்ளத்தில் எழுகின்ற காம உணர்ச்சியை அடக்க வழி என்ன? என்றனர். பரமஹம்சர் அதற்கு “விளக்கு எரிந்துகொண்டு வெளிச்சமாக இருக்கிற வீட்டில் திருடன் நுழையமாட்டான். அங்ஙனம் உயர்ந்த தெய்விகச் சிந்தனையில் மூழ்கியுள்ள மனதில் காம எண்ணங்கள் தலை யெடுக்கா” என்ருர். ஆழ்ந்த தெய்விக எண்ணத்தில் இருக்க முடியாதவர்கள் காம எண்ணம் தலையெடுக்கிற பொழுது அந்த வேளையில் எந்த உணவும் ஏற்காது, உப வாசம் இருந்து, தனியாகச் சென்று, இறை வனைக்குறித்து கண்ணீர்விட்டுப் பிரார்த்தனை செய்யலாம். ‘காம எண்ணத்தைத் துடைத் தெடுத்துவிடு’ என்று கசிந்துருகி பண்ணு கிற பிரார்த்தனையைக் கருணையோடு இறை வன் நிறைவேற்றுவார். மனதுக்கும் உடலுக் கும் வேலையில்லாது சோம்பலாக இருக்கும் பொழுதுதான் கீழான எண்ணங்கள் உள் ளத்தில் எழுகின்றன. ஆகவே யாண்டும் உடலும் மனமும் ஏதாகிலும் பயனுள்ள ஒரு வேலையில் மூழ்கியிருப்பது நல்லது. கணவனை இழந்த கைம்பெண்களும், மணவாழ்க்கை விரும்பாத கன்னியர்களும் தெய்விகச் சிந்தனை யில் மூழ்கிக்கொண்டு தங்களுக்குண்டான நித் திய கர்மங்களைச் செய்யப் பழக்கப்படுத்திக் கொள்ளவேண்டும். அப்படி இல்லாது மன திற்குச் சிறிது இடம் கொடுத்தால் அது நம் மைத் தவருன வழிக்கே இழுத்துக்கொண்டு செல்லும். காம உணர்ச்சியை ஊட்டும் நூல் களோ, படங்களோ, கையால் தீண்டவும் தகாதன. கண்ணுல் பார்க்கவும் தகாதவை கள். ஆனல் மனத்தைக் கட்டியாளத் தெரியா விட்டால் அவைகளை எடுத்துப் படிக்கவும், பார்த்து ரசிக்கவும் செய்வதுமட்டுமல்லாது அவற்றைப் படிப்பதால், பார்ப்பதால் மனம் கெட்டுவிடுமோ என்ற நொண்டி சமாதானங் களையெல்லாம் சொல்லி ஆறுதல் தேடப்பார்க் கும். ஆக காமச் சிந்தனைக்கு இடம் கொடாது இருக்க விரும்புபவர்கள் யாண்டும் விழிப் புடன் இருக்க வேண்டும். உண்மையான வைஷ்ணவன் பிற மாதர்களைத் தாயாக வணங்க வேண்டும் என்று கூறுகிருர் நரசிம்ம மேதா. தாயுமான சுவாமிகள் திருச்சியில் நாயக்க அரசில் உயர்பதவியிலிருந்து வந்தார். அருள்வேட்கை ஏற்பட்டு மலைக்கோட்டை எம் பெருமானை நாள்தோறும் வழிபட்டு வந்தார். காமவெறி பிடித்திருந்த அரசியார் தாயுமான சுவாமிகளிடம் முறைதவறி நடக்க முயன்ற போது அவ்வம்மைக்குப் புத்தி புகட்டித்திருந்தி வாழும் வழியைக் காட்டி விட்டுப் பதவியைத் துறந்து வெளியேறினர். அவருடைய மெய்த் துறவைக் கண்டு வியந்த அரசன் பொன்னுடை ஒன்று அவருக்குப் போர்த்தினன். சித்தம் போனபடி நடந்து தவத்திலே காலங்கழித்து வந்தார் தாயுமானவ சுவாமிகள். ஒரு இரவில் ஓர் அம்மையார் கடுங்குளிரில்மேலுடையில்லாது நடுங்கிக் கொண்டிருந்தார். அவ்வம்மையின் பரி தாபமான தோற்றம் அடிகள் உள்ளத்தைத் தொட்டது. தான் போர்த்தியிருந்த ஒரே சால் வையை அவ்வம்மைக்கு அளித்துவிட்டார். மறுநாள் காலையில் சேவகர்கள் விலையுயர்ந்த சால்வையைப் பிச்சைக்காரி போர்த்தியிருப் பதாக அரசனுக்குத் தெரிவித்தார்கள். உங்க ளுக்குக் கொடுத்த விலையுயர்ந்த அந்தச் சால் வையை ஏன் அப்பிச்சைக்காரிக்கு வழங்கினீர் கள்? என்று அரசன் தாயுமானவரிடம் கேட் டான். “அரசே அகிலாண்ட நாயகியான உமாதேவி நடு இரவில் கடுங்குளிரில் நடுங்கிக் கொண்டிருந்தாள். அந்த நிலையைப் பார்க்கச் சகிக்காது அதைப் போர்த்தினேன்” என்ருர் தாயுமானவர். மெய்ஞ்ஞானம் வந்தாலொழிய இத்தகைய வாசகம் உள்ளத்திலிருந்து வராது.

ஸத்யமேவ ஜயதே—வாய்மையே வெல்லும் என்கிற வாசகத்தை நமது அரசாங்கம் தனது சின்னமாக வைத்துள்ளது. பொய் பேசாது ஒரு மனிதன் இவ்வுலகில் வாழமுடியுமா என்ற வியப்பு வினு நம் முன்னே எழுகிறது. ஒரு காலத்தில் எதை ஒருவரால் செய்யமுடிந்ததோ அதை மற்றச் சமயங்களிலும் ஏனையவரால் செய்யமுடியும். கடைப்பிடிக்க முடியாதது என்பது இவ்வையகத்தில் இல்லை. நமக்கு நன்கு தெரிந்தவர்தான் காந்தியடிகள். சத்தியமே ஒரு வடிவெடுத்துக் காந்தியடிகளாக வந்து தோன்றி நமக்கு வழிகாட்டியது என்றால் அது மிகையாகாது. அவர் தோன்றிய இதே நாட்டில் அவர் கடைப்பிடித்த சத்தியம் எங்கே போனது? சிறுவன் ஒருவனைப் பள்ளியில் சேர்க்கும் போதும், பஸ்ஸிலோ, ரயிலிலோ நம் குழந்தைகளோடு பிரயாணம் செய்யும் போதும் உண்மையான வயதைக் கூட்டியோ குறைத்தோ சொல்லும் பெற்றோர் எத்தனை பேர்? இருப்பிலே இருந்துபோன பழைய பொருட்களை வாங்குவோரின் தலையிலே கட்டி விடுவதற்காகப் புதிய பொய்களைப் புனையும் வியாபாரிகள் எத்தனை பேர்? அரசியல் நோக்கங்கொண்டு பிடிக்காதவனையும் ஏதோ சாக்குச் சொல்லிப்பிடித்துச் சிறையில் வைத்துச் சித்ரவதை செய்துவிட்டுக் கோர்ட்டிலே எதுவுமே தெரியாத அப்பாவி போல் பேசும் யத்தர்கள் எத்தனை பேர்? ஏராளமான பணத்தைக் கூலியாக வாங்கிக்கொண்டு கொலைகாரர்களையும், கொள்ளை லாபம் அடிப்பவர்களையும் குற்றங்களிலிருந்து விடுவிக்கத் தாங்கள்படித்த சட்டங்களைத் தங்களுக்கேற்ப மாற்றியமைத்து வாழ்நாளெல்லாம் பொய்யுரைத்து வாழ்க்கை நடத்தும் வழக்கறிஞர்கள் எத்தனை பேர்? பாலும் தேனும் பெருகச் செய்து, பணமழை பொழியச் செய்து அரண்மனை போன்ற வீடுகளைக் கட்டித் தருவோம் என்று அழகாகப் பேசி, ஆசை மூட்டி ஆட்சியைப் பிடிக்க விரும்பும் அரசியல் வாதிகள் எவ்வளவு பேர்? இங்ஙனம் சொல்லிக்கொண்டு போனால் நாடு முழுவதும் பொய்மையால் புரை ஏறிக்கொண்டிருக்கிறது என்பது புலனாகும். சத்தியத்தைப் பின்பற்றுவது மறைந்துபோய் பணத்தைப் வழிபடுவது பெருகி வருகிறது. தாற்காலிக உலக இன்பம் நிறைவேறப் பண பலம் உதவுகிறது. பொய்பேசி வயிறு வளர்க்கும் வாழ்க்கை நடத்துபவர்களைச் சற்றுப் பொறுத்திருந்து பார்க்க வேண்டும். இலஞ்சம் வாங்கியும், பொய் பேசிப் பொருளீட்டி வசதியோடு வாழும் போலிகளைக் கண்டு பொறாமைப்படுபவரும், தாங்களும் அவர்போல் வாழ்க்கை நடத்த அவர்தம் வாழ்வைப் பின்பற்றினால் குறுக்கு வழியில் பணக்காரனாகச் சமுதாயத்தில் பிறர் மதிக்கப் பெருமையோடு வாழ முடியும் என்று நினைப்பவர்கள் சற்றுச் சிந்தித்துப் பார்க்க வேண்டும். பொய்யுரைத்துப் பொருளீட்டும் குடும்பத்திலுள்ளவர்கள் ஏதாவது ஒரு தீராத நோய்க்கு வசப்பட்டு ஏராளமான பணம் வைத்தியனுக்குக் கொட்ட வேண்டிய நிலையிலிருப்பார்கள். அவனுக்குப் பிள்ளைகளாக வாய்த்தவர்கள் போக்கிரிகளாக இருந்தால் முறைதவறிச் சம்பாதித்த செல்வத்தை நாசம்பண்ணும் நாசகாரிகளாக வந்தமைவார்கள். இப்படிப்பட்ட கவலையால் இரவில் தூக்கமில்லாது தவித்தும், வயிறார உண்ண முடியாது ஒரு குவளை கூழ் குடித்து வாழும் வாழ்வைச் சொர்க்கம் என்பதா நரகம் என்பதா? இக் கலியுகத்தில் சத்தியத்திற்கு நிகரான தபஸ் கிடையாது. உண்மையேபேசி உண்மையோடு எவன் நடப்பானோ அவனே உண்மையான வைஷ்ணவன்.

சமயம் நம் நாட்டுக்கு முதுகெலும்பு போன்றது. நல்ல பண்பையும், நல்ல பழக்க வழக்கங்களையும் பெற தம் பிள்ளைகளைப் பள்ளிக்கு அனுப்புகிறனர். பள்ளிக்குச் சென்றும் நல்ல பண்பின்றி அசுர இயல்போடு மாணவர்கள் வெளிவரக் காரணமென்ன? இன்றைய கல்வி முறைதான் அதற்குக் காரணம். ஏதோ வயிற்றுப்பிழைப்பை நடத்துவதற்கு வகை செய்யும் கல்வியாக உள்ளதே தவிர நல்ல பண்புகளைப் புகட்டி நல்லறிவை ஊட்டி வாழ்க்கையின் இலட்சியமாகிய இறைவனை அடைய உதவும் கல்வியாகத் தற்காலக் கல்வி முறை இல்லை. சமயக் கல்வியைப் புகட்டி நல்ல பண்புகளை வளரும் இளம் உள்ளங்களை வளர்ப்பார்களானால் சில ஆண்டுகளில் இக்கலியுகம் கிருதயுகமாகி விடும். அந்நாளை விரைவில் எதிர்பார்ப்போமாக.

(தொடரும்)

# வாசுதேவமனன விளக்கம்

(சுவாமி ஸதானந்தர்)

ஆத்மா ஆதி அந்தமற்றது, பிறவாதது, இறவாதது, என்றுமுள்ளது. ஆதலால் அதற்குக் காலம் இல்லை. அது ஒன்றே உள்ளது, அதுவே அனைத்தும் ஆகியிருக்கிறது, அது சர்வ வியாபி சர்வாந்தர்யாமி. அதுவே அனைத்தையும் தாங்குகிறது. ஆகையால் அதைத் தாங்குவதற்குத் தேசம், இடம் இல்லை. இடம் ஆத்மாவில் ஒடுங்கிவிடுகிறது. ஆத்மாவுக்கு அந்நியமாக இப்பிரபஞ்சத்தில் ஒன்றுமில்லை. அது அசைவற்றது. எங்கும் நிறைந்த பொருளாகையால் அது எங்கே அசைவது? அது நிஷ்கிரியா எனப்படுகிறது. அதற்குச் செயல் ஏது? பசி தாகம் அதற்கு இல்லை. அது தேடிப் பெறவேண்டியது ஒன்றுமில்லை. அது ஆணன்று, பெண்ணன்று, அலியன்று, அது ஆனந்த சொருபமானது, அறிவு மயமானது, என்றுமுள்ள சத்பொருள். ஆகையால் வர்த்தமானம், நிமித்தம், காரண காரிய நியதி, கர்மம்-பலன், அதற்கு இல்லை. அதற்குக் குணங்கள் இல்லை, பரிமாணம் இல்லை, எடை இல்லை, பெரியதில் பெரியது, சிறியதில் சிறியது, தூரம் இல்லை, அது இருந்த இடத்தில் இருந்து எங்கும் போக வல்லது. நீர் நனைக்காது, நெருப்பு எரிக்காது, காற்று உலர்த்தாது, கத்தியினல் வெட்டமுடியாது, பஞ்சபூதங்களும் அதை ஒன்றும் செய்யாது. அவைகள் ஆத்மாவிலிருந்து வந்தவைகள். ஆத்மா என்றைக்கும் இருந்தது இருந்தபடி இருக்கிறது. ஜீவகோடிகள் அனைத்தும் ஆத்மாவிடத்திருந்து வந்தவைகளே. அலையும் கடலும் போன்றும், நகைகளும் தங்கமும் போன்றும் கடாகாசம், மஹாகாசம் போன்றும் ஜீவனும் பரமாத்மாவும் ஒன்றே. நாம ரூபத்தைத் துடைத்து விட்டால் வஸ்து ஒன்றே. ஆத்மாவைப்பற்றிய இந்த விளக்கங்கள், அதன் யதார்த்தநிலை நமது மனதைக் கவருகின்றன. அவை உண்மைதான் என்று நம் அறிவும் ஏற்றுக்கொள்கிறது. ஆனல் நாம் ஏனே பிற உயிர்களைப் பார்த்துப் பயப்படுகிரேம், பொருமைப்படுகிரேம், வெறுக்கிரேம், கோபிக்கிரேம். ஏனே நாம் குறைநிலையில் இருப்பது போன்ற உணர்ச்சி இருக்கிறது. ஏனே பிறிதொன்றைப் பெற்று இன்பம் அடைய முயலுகிரேம். நமது நிஜ நிலையை மறந்து நம்மைச் சிற்றுயிர்களாகப் பாவித்துக்கொண்டு உழல்கிரேம். மாயைக்கு, அக்ஞானத்துக்கு, ஆசைக்கு, ஜீவபோதத்துக்கு அடிமையாய் இருக்கிரேம். ஆத்மாவைப்பற்றிய விளக்கங்களை எத்தனை தடவை படித்தாயிற்று, கேட்டாயிற்று, மனதில் எத்தனை தடவை நாமே சிந்தித்திருக்கிரேம். ஆனுலும் ஏன் பழைய நிலைமையிலேயே உழல்கிரேம்? இப்படி நம்மை ஜீவ போதத்தில் உழலும்படி செய்கிற காரணங்களுக்குப் பிரதிபந்தங்கள் என்று பெயர். பிரதிபந்தம் மூன்று வகைப்படும். 1. சம்ஸய பாவனை (சந்தேகம்) 2. அசம்பாவனை (அவநம்பிக்கை) 3. விபரீத பாவனை என்று அவை சொல்லப்படுகின்றன. "இவ்விளக்கங்கள் உண்மையே, சரியாகத்தான் இருக்க வேண்டும். இப்படிப்பட்ட பொருள்தான் இறைவன் ஆகிரூர்" என்று நம் அறிவு ஏற்றுக்கொள்கிறது, ஆனல் அது நமது அனுபவத்துக்கு வரவில்லை, அறிவில் ஸ்திரமாகப் படியவில்லை. மற்ற உலக விவகாரங்களை உண்மையாக உணர்வதுபோன்று நாம் ஆத்ம தத்துவங்களை உணரவில்லை. அதை ஸ்திரப்படுத்துவது எப்படி என்பது இனி ஆராயப்படுகிறது.

ருக், யஜுர், ஸாம வேதங்களில் உபநயனம் முதலிய கர்மாக்களைப் பற்றிய விவரங்கள், செய்முறைகள் அனேகவிதங்களாகச் சொல்லப்பட்டிருக்கின்றன. ஆனல் எம்முறையில் உபதேசம் செய்தாலும் அக்கர்மாக்களைச் செய்வதன் மூலம் நாம் என்ன உணர்வு பெறவேண்டும், என்ன வாழ்க்கை முறையை ஏற்றுக்கொள்ள வேண்டும் என்கிற அடிப்படை விஷயம், நோக்கம் ஒன்றேயாகும். அதேபோன்று ஒவ்வொரு உபநிஷதத்திலும் ஆத்ம தத்துவம் பல வகைப்பட்டதாக விளக்கப்பட்டிருக்கிறது. இவை எல்லாம் ஒன்றுதானு பலவகைப்பட்டவையா என்கிற சந்தேகம் ஸம்சயபாவனை என்று சொல்லப்படுகிறது.

வாக்கால் விளக்க முடியாத பொருளை இவ்வளவு விதங்களாகச் சொல்லி விளக்கியிருக்கிறார்கள். அப்படியும் ஆத்மாவைப்பற்றிப் பூரணமாக இன்னும் விளக்க முடியவில்லை. அது எப்படி முடியும்? எல்லா விளக்கங்களிலும் கூறியுள்ளபடி ஆத்மா இருக்கிறது. அவரவர் அனுபவத்தை அவரவர் சொல்லியிருக்கிறார்கள். எல்லா விளக்கங்களும் சரியானவையே. அவைகளை யெல்லாம் ஒன்று சேர்த்துத் தொகுத்து ஒரு மாலையாக்கிப் பாருங்கள். அது எவ்வளவு அழகாக இருக்கிறது. அது மனதிற்கு எவ்வளவு விகசிப்பைத் தருகிறது பாருங்கள். இதன் மூலம் ஆத்மாவின் மகிமை நமக்கு நன்கு விளங்குகிறது. அதவிடத்து எத்தகைய பக்தியை, அன்பை, ஐக்கியத்தை, ஈடுபாட்டை உண்டாக்குகிறது பாருங்கள். ஆகையால் ஆத்ம தத்துவங்களை மீண்டும் மீண்டும் கேளுங்கள். எல்லா உபநிஷதங்களுக்கும் அத்வைத பரமான பரமாத்மாதான் தாத்பர்யம். ஆகையால் எல்லாவிதமான விளக்கங்களையும் கேளுங்கள். இதைச்சிரவணம் என்று சொல்லுவார்கள். ஆத்மாவைப்பற்றிக்கேட்கிற வாய்ப்பு யாரோ சிலருக்குத்தான் வாய்க்கிறது. அவர்கள் பாக்கியவான்கள். இடையறாத சிரவணத்தால் ஸம்சய பாவனை போய்விடும். எல்லா விளக்கங்களும் ஒன்றைப்பற்றியதே. அப்பொருளோ விளக்கங்களை யெல்லாம் தாண்டி இருக்கிறது என்கிற உணர்வு சிரவணத்தால் காலடைவில் ஊர்ஜிதமாகிறது.

சிரவணத்தால் பிரமாண விஷயமான சந்தேகம் நீங்கிய போதிலும் ஒன்றுக்கொன்று வெவ்வேறான ஜீவன்—ஈசுவரன்—உலகம் ஆகிய முப்பொருள்களும் உண்மையாகவே தோன்றுகின்றன. அத்வைதம்—இரண்டற்றது என்கிற நிலைமை எப்படி உண்மையாகும்? இம்மூன்றும் ஒன்றுதான், பரமாத்மாவினிடத்திருந்துதான் ஜகத்தும் ஜீவனும் தோன்றி வந்துள்ளனஎன்று எப்படிச் சொல்ல முடியும்? இத்தகைய எண்ணம், ஐயம் வருகிறது. இதை அஸம்பாவனை என்கிறார்கள். இது மனனத்தால் தீரும் என்று வழியும் சொல்லியுள்ளார்கள். ஆசிரியர் நல்ல பாடல்கள் சிலவற்றை மனப்பாடம் பண்ணி வரும்படி மாணவர்களுக்குக் கட்டளை இடுகிறார். மாணவன் வீட்டிற்கு வந்து அப்பாடல்களைப் பலதடவை படித்துவிட்டுப் புத்தகத்தை மூடிவைத்துவிட்டுப் பாடலை ஞாபகத்துக்குக் கொண்டுவருகிறான். பாதிப்பாடல் வந்துவிட்டது. ஏதோ ஒரு பதம் ஞாபகம் வரவில்லை. மறுபடியும் புத்தகத்தைப் பார்த்துப் பழையபடி படிக்கிறான். இப்படிமுயன்று பாடல்களைத்தடங்கல்இல்லாமல் மனப்பாடம் பண்ணிவிடுகிறான். மனனம் என்பது கிட்டத்தட்ட இது போன்றது. ஆத்மாவைப்பற்றிச் சிரவணம் பண்ணின உண்மைகளையெல்லாம் மனம் பல தடவை நினைப்பதால் ஆத்மா பற்றிய சூக்ஷ்ம மான உண்மைகள் எல்லாம் மனதில் புலப்பட ஆரம்பிக்கின்றன. நமது வாழ்வில் நித்தியம் நாம் அனுபவிக்கிற அவஸ்தாதிரயத்தைச்சாஸ்திரம், ஆத்மாவின் ஏகத்வத்தை நிரூபிக்க, உவமையாகக் காட்டுகிறது. ஜாக்கிரத அவஸ்தையில் பிரபஞ்சம்—ஜீவன்—பரம் என்று மூன்றாக இருப்பது சுஷுப்தியில் இல்லாது போய் விடுகிறது. ஒரு நிலையில் இல்லாது போகிற வஸ்துவுக்கு சத்—யாண்டுமுள்ள தன்மை—போய்விடுகிறது. சுஷுப்தியில் பிரபஞ்சம் இல்லாது போகிறது. பஞ்சபூதங்கள் இல்லை, அவற்றின் தன்மாத்திரைகள் இல்லை, அவைகளை அனுபவிப்பதற்கு இந்திரியங்கள் இல்லை, மனம் இல்லை, சரீரம் இல்லை, பிரக்ஞை—அறிவு ஒன்றுதான் மிச்சமிருக்கிறது. எல்லா அவஸ்தைகளிலும் பிரக்ஞை மட்டுமே மிச்சமிருக்கிறது. அதன் உதவியினால்தான் ஜாக்கிரத, சொப்பனத்தில் பிரபஞ்சத்தைப் பார்க்க இயலுகிறது. அது என்ன ஜீவனா அல்லது பரமாத்மாவா? அது ஜீவன் என்றால் அனந்தங்கோடி தனித்தனி ஆத்மாக்கள் உள்ளன என்று ஆகிறது. முப்பொருள் இப்போது அனந்தங்கோடி ஆகிவிட்டதே. அழிவற்றது, அகண்டமானது, சர்வ வியாபி எத்தனை பொருள் இருக்க முடியும்? இப்போது கடாகாசம், மகாகாசம் உதாரணம் சொல்லப்படுகிறது. கடாகாசமாகத் தோன்றிக் கொண்டிருப்பதற்கிடையிலும் அது மகாகாசமாகத்தான் இருக்கிறது. பானையின் உள்ளேயும் வெளியேயும் பானையின் ஊடேயும் உள்ள பொருள் ஒன்றே. பெயரளவில்இரண்டு பொருள்களாகத் தோன்றுகின்றன. நாமத்தையும் வடிவத்தையும்

அகற்றி விட்டால் எல்லாம் தங்கமே, எல்லாம் கடலே, அடிப்படையில் வஸ்து ஒன்றே. கன வில் தோன்றிய அனைத்தும் நம் மனதின் தோற்றமே, நமது மனத்திரையில் நம் அறிவு காட்டிய படக்காட்சியே ஆகும். நமது மன துக்குப் புறம்பாக இப்பிரபஞ்சம் இல்லை. உண்மையில் பிரபஞ்சம் என்று ஒன்று இல்லை, அகண்ட சச்சிதானந்தம் ஒன்றே மிச்சமிருக் கிறது என்று ஞானிகள் பகர்கிறார்கள். இவ்விஷயங்களை யெல்லாம் மனனம் பண்ணப் பண்ண அறிவு தெளிவடைகிறது. ஒரு உண்மை மற்றொரு உண்மைக்கு ஆதாரமாய் இருப்பது விளங்குகிறது. பிறகு அனைத்தும் உண்மையே என்பது ஊர்ஜிதமாகிறது. ஒரு உண்மையை ஒப்புக் கொண்டால் பிறகு அனைத்தையும் ஒப்புக் கொண்டாக வேண்டும். இவ்விதமாக இருப்பதைத் தவிர்த்து வேறு விதமாகப் பிரம்மம் இருக்க முடியாது என்று புலப்படுகிறது. இதைவிடமனதிற்கு ஆரோக்கி யமான சிந்தனை வேறு இல்லை. புராணங்களில் ஸ்ரீ கிருஷ்ணனது ஜீவிதத்தில் ஆத்ம தத்துவங் கள் நன்கு கதை ரூபமாக விளக்கப்பட்டிருக் கின்றன. அவைகளையும் சீர்தூக்கிஆராயலாம். அது சிறந்த தியானம் ஆகிறது. ஆத்ம தத்து வங்களைச் சிந்திக்கச் சிந்திக்க மனது எவ் வளவு மகிழ்ச்சியடைகிறது! முடிவில் முப் பொருள் உண்மையும் அடிபட்டுப்போய் அத் வைத நிலையை மனது ஏற்றுக்கொள்கிறது. ஆனால் இவ்வளவுக்குப் பிறகும் பாம்பு புலி யைப் பார்த்தால் நமக்குப் பயம் வந்துவிடு கிறது. எல்லாம் பிரம்மமயம், சர்வம் விஷ்ணு மயம். ஜகத், தன்மயமானால் எதைப் பார்த் துப் பயம் வருகிறது? சிரவணம், மனனம் இவைகளால் சந்தேகம் நிவர்த்திக்கப்பட்டும் அனாதிகாலமாக வந்த அவித்தையால் ஏற் பட்ட வாசனையினால் அனந்தங் கோடி உயிர் களையும் பேதங்களையும் உடைய இந்த ஜகத் வாஸ்தவமானது என்ற நம்பிக்கையே நம் மைப் பற்றியிருக்கிறது. அந்த எண்ணம் மன தில் ஆழமாக ஊறிப்போயிருக்கிறது. இது விபரீத பாவனை எனப்படுகிறது. இது நிதித்யாசனத்தால்தான் தீரும். ஆத்மாவின் சொரூபத்தைப் பற்றி சிரவணம், மனனம் இவைகளால் நாம் அறிந்துகொண்டவைகளை யெல்லாம் அடிக்கடி நினைக்கவேண்டும். அது தைல தாரை போன்று இடையறாத சிந்தனை ஆகவேண்டும். அது பிரத்யாகாரம், தாரணை, தியானம், சமாதி போன்று படிப்படியாக ஆழ்ந்ததாகி அவ்வுணர்வில் மாறாட்டம் இல்லா மல் நிலை பெறுகிற தன்மை வருகிறது. அது நிதித்யாசனம் எனப்படுகிறது. அதைச் சமாதி என்றும் சொல்லலாம். பழைய சம்ஸ்காரங் கள் எல்லாம் முற்றிலும் போய்ப் புதிய ஆத்ம பாவனைதான் முற்றும் உள்ளது. அந் நிலையில் அறியாமை போய்விடுகிறது. இருட் டறைக்குள் கொண்டு வந்த விளக்கினால் அறை முழுவதும் ஒளி நிறைந்தது போன்று ஆத்மஸ்மரணை, ஆத்மபாவனை ஸ்திரமாக இடம் பெற்றுவிட்ட ஞானியின் உடல், மனம், முகம் பிரம்ம தேஜஸ் பெறுகிறது. ஆத்ம சிந்தனையினால் உண்டாகும் ஒளி தேஜஸ் என்றும், ஓஜஸ் என்றும் அழைக் கப்படுகிறது. ஆத்ம பிரகாசம் உடல் மூலம் ஒளிரும் பொழுது தேஜஸ் என்றும், உள்ளத் தில் ஒளிரும் பொழுது ஓஜஸ் என்றும் அழைக் கப்படுகிறது. ஆத்மப் பிரகாசம் உடையவர் களாவது நம் வாழ்வின் இலட்சியமாகும். அதன்பிறகு மயக்கமில்லை, பயம் இல்லை, எல் லாம் பிரம்மமயம் ஆகிவிடுகின்றன. இங்ஙனம் பிரதி பந்தங்கள் மூன்றும் நிவர்த்தியாகிவிடு கின்றன. ஆனால் இதை ஒழிக்க முடியாத ஒரு நிலையும் விளக்கப்படுகிறது. எதையும் எரிக்க வல்லஅக்னியானது மணி, மந்திரம் இவைக ளால்தடை செய்யப்பட்டுத் தாற்காலிகமாக ஒரு துரும்பைக்கூட எரிக்க முடியாமல் போகி றது. அதே போன்று நமது பிரதிபந்தங்களின் தடை அதிகமாக இருக்கிறபோது நம் சாதா ரண சாதனம் அதை அழிக்கப்போதாமல் அக் ஞான நிலை, பிரதிபந்தங்களில் தளைக்கப்பட்ட நிலை நம்மிடம் நீடிக்கிறது. ஆனால் இடை யறாத சாதனம் பிரதிபந்தங்களை வென்றே தீரும். வேதாந்தம் ஜீவபோதத்தை, சரீர போதத்தை நீத்துவிட்டுப் பரபோதம், ஆத்ம போதம் பெறவே போதிக்கிறது. ஆத்ம போதமே நமது யதார்த்தநிலை ஆகிறது. பிரம்மமே சத்தியம்.

---

# கர்நாடக யாத்திரை

( சுவாமி சாந்தானந்தர் )

[199ஆம் பக்கத் தொடர்ச்சி]

27-9-77 அன்று தீனதயாபரி, பூர்ண கடாக்ஷி, திரிபுரசுந்தரி ஆகிய அம்பாள் திருவடியில் நன்கு தூங்கி விடியற்காலம் எழுந்தோம். துங்கா நதியில் குளித்தோம். தெளிந்த, குளிர்ந்த நீர். அப்போது மனமும் சரீரமும் அடைந்த புத்துணர்ச்சியை என்னென்பது! பெரிய படித்துறை, ஆலயத்துக்கு முன்பு விசாலமான, கல் பாவிய வெளி. அவைகள் மனதை விரிவுபடுத்துகின்றன. ஐந்தரை மணிக்குப் பிரவசன மந்திரில் ஐக்கிய வணக்கம் செய்தோம். ஆறு மணிக்கு ஸ்ரீ சாரதா அம்பாளைத் தரிசிக்கச் சென்றோம். ஆலயம் திறக்கவில்லை. முன் வாசலில் நின்று திருப்பள்ளியெழுச்சி பத்துப் பாடல்களையும் பாடினோம். பாடிமுடியும் தறுவாயில் கோவில் திறந்தார்கள். கண் குளிரத் தரிசித்தோம். தன் குழந்தைகளை ஆசீர்வதித்து மிகுந்த பரிவுடன் பிரியா விடை கொடுத்தாள் அம்பாள். ஒலிபெருக்கியில் தெரிவித்த கருத்தாவது: தகுதியிருந்தால் கிடைக்கவேண்டியது தானே கிடைக்கும்; தகுதியில்லாதவர்க்கு அம்பாள் கொடுக்க மாட்டாள். ஒருவன் வனத்தில் தந்திர சாதன முறைப்படி அம்பாள் வழிபாட்டிற்காகச் சிரமப்பட்டுப் பொருள்களை யெல்லாம் சேகரித்து மயானத்தில் நடுநிசியில் பிரேதத்தின்மேல் அமர்ந்து பூஜை செய்தான். அப்போது அங்கு ஒரு புலி வந்து அவனைக் கவ்விக்கொண்டு போய்விட்டது. அங்குத் தெய்வச் செயலாக அப்பக்கம் வந்த ஒருவன் புலியைப் பார்த்துப் பயந்து ஒரு மரத்தில் ஏறிக்கொண்டான். புலி போனதும் பூஜா திரவியங்களையும், சாமக்கிரியைகளையும் பார்த்தான். ஏதோ ஒரு உள்ளுணர்வு அவனைத் தூண்டியது. அவன் பிரேதத்தின் மீது அமர்ந்து பூஜை செய்தான். அம்பாள் பிரத்யக்ஷமானாள். அவன் கண்ணீர் மல்க "தாயே, வெகு சிரமப்பட்டு இப்பூஜைக்கு ஏற்பாடு செய்து உன்னை வழிபட்டவனுக்கு நீ அருள்புரியவில்லையே. ஒரு முயற்சியும் செய்யாத வழிப்போக்கனாகிய எனக்கு நீ அருள் புரிந்தனையே. உன் லீலைகளின் மர்மம் எனக்கு விளங்கவில்லையே" என்று பிரார்த்தித்தான். அதற்கு அம்பாள் "குழந்தாய்! உங்கள் இருவருடைய பூர்வ வரலாறுகள் உங்களுக்குத் தெரியா. நீயும் இங்ஙனம் பல தடவை முயன்று மடிந்திருக்கிறாய். இப்போது நீ அருளுக்குப் பாத்திரனாகத் தகுதியுடையவனாக இருக்கிறாய். அதனால் பிரத்யக்ஷமானேன். அவனும் நாளடைவில் என் அருளைப் பெறுவான்" என்று ஆசீர்வதித்தாள். இடையறாது நம்மை நாம் தகுதியுடையவர்களாகச் செய்து கொண்டே இருப்போமாக. காளஹஸ்தியில் சிவாசாரியார் பூஜை செய்தார். சிவன் அருளுக்கு அவர் பாத்திரமாகவில்லை. கண்ணப்பன்வேடன், பிராகிருதன். சாஸ்திரோக்தமான ஐதிகமான பூஜைமுறை ஏதும் அவனுக்குத் தெரியாது. அவன் தற்செயலாக அங்கு வந்தான். சிவலிங்கத்தைக் கண்டான். தன் உயிருக்கு உயிரான ஒன்றைக்கண்ட உணர்ச்சி அவனுக்கு ஏற்பட்டது. இழந்து, பிரிந்து தவிக்கின்ற ஒன்றை மீண்டும் பெற்ற உணர்ச்சி. வெகுநாள் பிரிந்து இருந்த தாய் தந்தையரைக் கண்ட உணர்ச்சி, மகிழ்ச்சி பொங்கியது. அம்மூர்த்திக்கு மாமிசம் படைத்தான். முதலில் ஒரு கண்ணை அப்பினான். செருப்புக்காலால் அடையாளம் வைத்துக்கொண்டு தன் மறு கண்ணையும் அம்பால் குத்தி எடுத்து அப்பினான். அவன் உணர்ச்சி எங்கே! நம் உணர்ச்சி எங்கே! அவன் இறைவன் அருளுக்குப் பாத்திரனானான். பூஜையில்,சாதனத்தில்,வழிபாட்டில்உணர்ச்சிவேண்டும். ஈடுபாடு வேண்டும், தீவிரம் வேண்டும், மன ஐக்கியம் வேண்டும், தியாகம் வேண்டும். பூஜா திரவியங்கள் என்ன செய்யும்! மூர்த்தி என்ன செய்யும்! அவைகள் நம் மனதில் தூண்டுதல் தருவதற்குரிய புறச் சின்னங்களே ஆகும். நம் உள்ளம்தான் பக்குவமடைய வேண்டும். பக்தியில் மேலே போகவேண்டும். அம்பாள் நமக்கு அருள்புரிவாளாக. அடுத்து ராமாயணம் சொல்லப்பட்டது.

ராமாயணத்தை அருணாசலக்கவிராயர் மிக எளியநடையில் கவிதையாகப் பாடியுள்ளார்,

ராமனுக்கு மன்னன் முடிதரித்தாலே .........' என்று துவங்கும் பாடலை இனிய குரலில் ராகத்துடன் பாடினர். அது கேட்க மிக இனிமையாகவும் பக்திபூர்வமாகவும் இருந்தது. "ராமர் பட்டாபிஷேகச் செய்தியைக் கூனி கேட்டுமனம்புழுங்கிக்கைகேயியை மனம்மாற்றி விட்டாள். கைகேயி அரண்மனையில் அலங்கோலமாகக் கிடக்கிருள். தசரதன் வருகிருன். அவள் கிடந்த கோலத்தை 'அயோத்தியை விட்டு ஸ்ரீ தேவி போகப்போகிருள். அந்த இடத்தை நாம் பிடித்துக்கொள்வோம் என்று மூத்தவள் வந்ததுபோல் இருக்கிறது' என்று கம்பன் வர்ணிக்கிருர். அங்கு இன்னெரு தாய் அச்செய்தி கேட்டு அந்த உத்தமன் பல்லாண்டு வாழட்டும், அவனுக்குக் கடவுள் எல்லா ஆசீர்வாதங்களையும் அருளவேண்டும் என்று பிரார்த்தித்துத் தானம் செய்தாள். ராமன் பட்டாபிஷேகம் செய்துகொண்டு முன்னல் வெண்சாமரம் வீச பின்னல் வெண்கொற்றக் குடை பிடிக்க தன்னைக் காணவருவான் என்று நினைத்துக்கொண்டிருக்கிருள். ஆனல் விதி முன்னே நடக்க அறம்பின்னே வர அன்றலர்ந்த செந்தாமரையன்ன முகத்தினன் சோர்ந்த வதனத்துடன் வருகிருன். தாயின் வருத்தத்தைத் துடைப்பது எப்படி, அவளைச் சமாதானம் அடையச் செய்வது எப்படி என்கிற சிந்தனையினல் சிறிது கவலைதோய்ந்த முகத்தினனகக் காணப்பட்டான். ராமாயணம் அன்பு சாஸ்திரம், நீதி சாஸ்திரம், சரணுகதி சாஸ்திரம். இவ்வுலகில் இப்போதும், என்றுமே கூனி இருக்கிருள், கைகேயி இருக்கிருள், கௌசல்யாதேவி இருக்கிருள், ராமனும் இருக்கிருன்." இங்ஙனம் அன்று சுருக்கமாக முடித்துவிட்டார். ராமாயணம் கேட்டுக்கொண்டே பன்னிரண்டரை மணிக்குப் பேலூர் வந்து சேர்ந்தோம். ஸ்ரீலஸ்ரீ திருச்சி சுவாமிகள் மூலம் தகவல் தெரிந்த அவ்வூர் அன்பர் ஒருவர் எங்களுக்கு இருப்பிட வசதியும் ஆகார வசதியும் செய்து வைத்திருந்தார். வழியில் எங்கள் பஸ்ஸை நிறுத்தி அதில் ஏறிக்கொண்டார்.

எல்லாரும்ஆலயத்திற்குச் சென்ருேம். நுழைவாயிலில் தென்னட்டுப் பாணியில் அமைந்த சிறிய கோபுரம். உயரமான கம்பீரமான எடுப்பான வாசல். முன்னல் கல் பரப்பிய மிக விசாலமான வெளியிடம். பெரிய அகன்ற சுற்றுப்பிரகாரம். மிகவும் சுத்தமாக இருக்கிறது. முன்னல் அழகிய சிறிய கருடாழ்வார். சுமார் நூறு அடி நடந்து ஆலய வாசலை அடையவேண்டும், மூலவர் சென்ன கேசவப் பெருமாள். சென்ன என்ருல் அழகு என்று பொருள். ஒன்பது அடி உயரமுள்ள சிலை. தாயார் பெயர் சௌம்யநாயகி. உற்சவமூர்த்தி ஸ்ரீ தேவி பூதேவி சமேதராய் தனியாக ஒன்று உள்ளது. பெருமாள் பஸ்மாசுர சம்ஹாரத்துக்காக எடுத்த மோகினி அவதார கோலத்தில் இருக்கிருர். முகம் அழகிய பெண் முகமாக உள்ளது. மூக்கில் மூக்குத்தி முத்து வளையம் அணிந்துள்ளார். ஆலய முன் மண்டபத்தில் அமர்ந்து ஐக்கிய வணக்கம் செய்தோம்.

1317ல் ஸ்ரீ ராமானுஜரின் காலத்தில் அவருடைய சிஷ்யர் முதலியாண்டாரால் இம்மூர்த்தி பிரதிஷ்டை செய்யப்பட்டது. யாதவ அரசருள் ஒருவரான விஷ்ணுவர்த்தனன் ஸ்ரீ ராமானுஜரிடம் மனம் கவரப்பட்டு அவருடைய சீடராகி உத்தம பக்தன் ஆனன். தன் குருவின் விருப்பத்துக்கு இணங்க அவன் அக்கோயிலைக் கட்டினன். அக்கோயிலின் கலையழகைச் சொல்லால் வர்ணிக்கமுடியாது. ஸ்ரீ கிருஷ்ணனது ஆணைப்படியுதிஷ்டிரருக்குத் தேவதச்சன் மயன் இந்திரப் பிரஸ்தத்தில் ஒரு சபா மண்டபம் கட்டினன். அப்படி ஒரு தேவதச்சன்தான் அதைக் கட்டியிருக்க வேண்டும். பிரமிட் போன்ற கட்டடங்களை இவ்வுலக மானுடரால் கட்டியிருக்க முடியாது. வேறு கிரஹங்களிலிருந்து வந்த வேறு விதமான உயர் சக்திகள் வாய்ந்த ஜீவர்களே அவைகளைக் கட்டியிருக்க வேண்டும். வேறு உலக ஜீவர்கள் நம் மானுட உலகிற்கு அவ்வப்போது வருகிருர்கள் என்பதற்கு இவைகள் சான்ருகும் என்று மேல்நாட்டில் ஒரு கொள்கை உண்டு. இன்னும் பல்வேறு சான்றுகளும் காட்டுகிருர்கள். எது எவ்வளவு உண்மையோ நமக்குத் தெரியாது. அக்கோயிலைக் கட்டியவர்கள் அளவற்ற கலையழகும், கலைத் திறமையும், தெய்வபக்தியும், உள்ளவர்கள். தங்களுடைய வாழ்வின் லக்ஷியமாகக்கொண்டு அதைச் செய்து முடித்திருக்கிருர்கள் என்பது உண்மை. நம் தேச சங்கீதம், சிற்பம், ஓவியம், காவியம், இலக்கியம், கவிதை ஆகிய எல்லாக்

கலை ஞானங்களும் தெய்வத்தையே நடுநாயக மாகக் கொண்டிருக்கின்றன. அவைகளை முறை யாகப் பயின்றால், கையாண்டால் அவைகள் கடவுளைக்காண உதவுகின்றன. அவைகளில் ஈடுபட்டிருப்பது தெய்வ வழிபாட்டிற்கு, ஆத்ம சாதனத்துக்கு நிகராகிறது. இதுவே நமது கலை ஞானங்களின் விசேஷம். தூண்களில் நுண்மையானவேலைப்பாடுகள் இருக்கின்றன. அக்கோவிலை இந்திய கலாச்சாரத்தைக் காட் டும் கண்ணாடி என்கிறார்கள். அக்கோவில் நட்சத்திர வடிவில் அமைந்துள்ளது. நாற்பத் தெட்டு தூண்கள் உள்ளன. ஒவ்வொன்றிலும் ஓர் அழகு. ஒவ்வொன்றும் ஓர் அமைப்பு. தூண், மேல்கூரை, சுவர் எல்லாவற்றிலும் கலையழகு சொட்டுகிறது. சிற்பக்கலையின் நேர்த்திக்கு இது எடுத்துக்காட்டாக விளங்கு கிறது. கம்பராமாயணத்தில் எந்தப் பாடலி லும் கவிதை இன்பமும் பக்தி இன்பமும் விளங்குவது போன்று இங்கு ஆலயத்தில் சிற்பம் ஒவ்வொன்றும் கருத்தைக் கவரும் வண்ணம் அமைந்துள்ளன. யாரும் வியப் படையாமல் இருக்கமுடியாது. அவை யாவும் ஒருவகை மாக்கல்லினால் செய்யப்பட்டுள்ளன. நாற்பது அடி உயரமுள்ள கம்பம் ஒரு பீடத் தில் உள்ளது. அப்பீடத்திற்கும் கம்பத்துக் கும் இடைவெளி உள்ளதாம். அக்கோயில் கட்டிமுடிக்க நூற்றைந்து ஆண்டுகள் ஆயின வாம்.

மதிய உணவு எடுத்துக்கொண்டு சத்திரத் தில் சிறிது நேரம் ஓய்வு எடுத்தோம். சிலர் மறு படியும் ஆலயத்திற்குச் சென்று சுற்றிப்பார்த்து வந்தார்கள். சிலர் படங்கள் கலைப்பொருள் கள் வாங்கினார்கள். நாலேகால் மணிக்கு அங் கிருந்து புறப்பட்டு ஐந்து மணிக்கு ஹளேபீடு வந்து சேர்ந்தோம். ஹளே என்றால் பழைய, பீடு என்றால் தலைநகரம் என்று பொருள். பன்னி ரண்டாம் நூற்றாண்டில் ஹோய்ச்சல வம்சத்தி னரின் பழைய தலைநகராக இது விளங்கியுள் ளது. முஸ்லீம் படைஎடுப்புகளால் அக்கோயில் சிதைக்கப்பட்டுள்ளது. தொடர்ந்து சுமார் இரு நூறு ஆண்டுகள் வேலை செய்து அக்கோயில் கட்டிமுடிக்கப்பெறாமல் போயிற்றாம். அதுசிவன் கோயில். உள்ளே நூற்றெட்டுத் தூண்கள் உள்ளன. ராமாயணம், பாகவதம், மஹாபார தம், பதினெட்டுப் புராணங்கள் ஆகியவை சிற் பங்களில் வடித்துள்ளார்கள். உள்ளே இரண்டு சந்நிதிகள் உள்ளன. சாந்தலேஸ்வரர் சந்நிதி ஒன்று. அதில் பூஜை இல்லை. பெரிய லிங்கம். முன்னால் நந்தி உள்ளது. இரண்டாவது ஹோய்ச்சலேஸ்வரர் சந்நிதியில் சிவலிங்கத் திற்குப் பூஜை நடக்கிறது. இங்கும் நந்தி உள் ளது ஹளேபீட்டிலிருந்து புறப்பட்டுச் சிரவண பெலகோலா வந்து சேர்ந்தோம். வித்யானந்த நிலையம் என்னும் ஜைனர்களின் மேற்பார்வை யில் உள்ள விடுதியில் தங்கினோம். விடுதி மிகவும் சுத்தமாகவும் வசதியாகவும் உள்ளது. ஹோட்டலில் கிடைத்ததைச் சாப்பிட்டு விடு திக்கு வந்து சேர்ந்தோம்.

பாரததேவியே! இவ்வுலகின் பூஷணம் நீ. புண்ணிய பூமி என்று நீ சிறப்பாகச் சொல் லப்படுகிறாய். ஏனென்றால் உன் வாழ்க்கை லக்ஷியமும், அதை அடைய நீ செய்துள்ள சாஸ்திரம், ஆலயம், வழிபாடு, ஆசாரம், வாழ்க்கை முறை, சம்பிரதாயம் எல்லாம் மகத் தானவை. உனக்கு நிகரான ஒன்றை உலகில் காணமுடியாது. கர்ம பூமி என்று நீ போற்றப் படுகிறாய். உனது திவ்யமான ஆத்மீகச் செல்வச் சூழ்நிலையில் இங்கே பிறந்த ஜீவன் தீய பழவினைகள்தேய, புதிய நற்கர்மங்களால், புதிய சம்ஸ்காரங்களால் புதிய ஜீவனாக மாறி அமைகிறான். இவைகள் எல்லாம் முக்காலத்தி லும் உண்மை. எங்கள் மாதரு பூமியே, உன்னைப் பல்கோடி முறை வணங்குகிறோம். கடவுளையே நம்பி நம் முன்னோர்கள் எவ்வளவு அமைதி யான, எளிய, தூய, வாழ்வு வாழ்ந்து வந் துள்ளார்கள். உலக ஆசை இல்லை, ஆடம் பரம் இல்லை, தங்கள் முழு மனதையும், அவகாசத்தை யெல்லாம் பாரமார்த்திகத்திற் கென்றே செலவழித்துள்ளார்கள். பாகவதத் தில் சத்ரயாகம் என்று ஒரு யாகம் விளக்கப் படுகிறது. அது ஆயிரம் வருஷம் செய்யப் படுவது. கடவுளை அடைவதை லக்ஷியமாக, சங்கல்பமாகக் கொண்டது. அந்த யாகத்தின் யஜமானர்கள் (யஜமானன் என்றால் யாகத் தைச் செய்கிறவன், அதன் பலனை அடைகிற வன் என்று பொருள்) இப்புண்ணிய பூமியின் மக்கள் அனைவரும் ஆவார்கள். என்ன உயர்ந்த லக்ஷியம், மன ஒற்றுமை, ஆழ்ந்த அன்பு,

பாருங்கள்! ஆயிரம் வருஷங்களில் எத்தனை தலைமுறைகள் மாறிவிடும். பித்ருயக்ஞத்தை எவ்வளவு சிறப்பாக நிறைவேற்றியுள்ளார் கள் பாருங்கள். தாஜ்மஹால் கட்டிமுடிக்க இரு பத்தொரு வருஷங்கள் ஆயின என்று படிக்கி றோம். ராமாயணத்தில் தம் மக்கள் அறுபதாயி ரம் பேரின்நீர்க்கடன் செய்ய தேவகங்கையைப் பூலோகத்துக்குக் கொண்டு வரும் விஷயத்தில் சகரன்—அசமஞ்சன் —அம்சுமான் — பகீரதன் ஆகிய நான்கு தலைமுறைகள் முயன்று காரிய சித்தி அடைந்தார்கள் என்று படிக்கிறோம். பித்ருபக்தி, பித்ருயக்ஞத்தினால் அல்லவா இந்தத் தேசத்தின் உயர்ந்த பாரம்பர் யம் வழிமுறை வழிமுறையாக, தலைமுறை தலைமுறையாகக் கட்டிக்காக்கப்பட்டு இன்று நம்மிடம் ஒப்படைக்கப்பட்டுள்ளது. தேவியே! எங்கள் தலைமுறையில் உன் சிறப்பை எல்லாம் பாதுகாக்கவும் தெரியாமல், வளர்க்க வும் தெரியாமல், சிதறடைய விட்டு விடு வோமோ? இதுதான் தெய்வச் சித்தமா? பொதுமக்களின் தெய்வ நம்பிக்கை தளர்ந்து, தேய்ந்து வருகிறது. நல்வாழ்க்கையிலேயே நம்பிக்கை குறைந்து வருகிறது. ஆசையும் சுய நலமும் திடமாகப் பற்றியிருக்கின்றன. உல காயதம், மிலேச்சகுணம் பரவி வருகின்றன. அல்பமான நாகரிகம் தலை தூக்கித் திரிகிறது. தேவி சிரிக்கிறாள். மகனே, எனக்குத் தீர்க்கா யுள். நீ கவலைப்படாதே. சத்யமேவ ஜயதே, ராமஜயம், தர்மம் தலைகாக்கும் என்பனவெல் லாம் உண்மையானால் சத்தியமானால் நானும் சாகமாட்டேன். நமது லக்ஷியம் சாகாதது. அது சிரஞ்சீவித் தன்மை வாய்ந்தது. இந்தத் தர்மத்தினால்தான் உலகம் நிலைத்திருக்கிறது. பொதுமக்களைப் பற்றி நீ கவலைப்படாதே. தனி ஒரு மனிதனின் முயற்சி, சுவானுபூதி கோடிக்கணக்கான பேரை மாற்றிவிடும். அருட்பிரவாகத்தை யாரும் எதிர்த்து நிற்க முடியாது. நீ அங்ஙனம் ஆக முயலுவாயாக. இப்படியெல்லாம் மனதில் எண்ணங்கள் எழு கின்றன. கடவுளே! எங்கள் யாவருக்கும் எங்கள் மாத்ரு பூமிக்கும் அருள்புரி என்று பிரார்த்தித்துக் கொண்டு நன்கு தூங்கினோம்.

28—9—77 அன்று விடியற்காலம் ஓம் சக்தி பாடி எழுப்பினார்கள். விடுதியிலேயே அனை வரும் சௌகரியமாகக் குளித்தோம். கோம தீஸ்வரர் சிலை மலைமேல் இருக்கிறது. ஏற முடியாதவர்கள் கீழே இருந்தார்கள். மற்றவர் கள் காலை ஆறு மணிக்குப் புறப்பட்டு ஆறரை மணிக்குப் போய்ச் சேர்ந்தோம். கதவு திறக்கவில்லை. வாயிலின் முன் அமர்ந்து ஐக் கிய வணக்கம் செய்தோம். கோமதீஸ்வரர் கோவில் அர்ச்சகர் தாமே வந்து, எங்களை சந் நிதியில் வந்து வழிபாடு செய்யுங்கள் என்று அழைத்துச் சென்றார். ஆ! என்ன கம்பீர மான சிலை. நிர்வாண கோலம். நின்ற நிலை. சாமுத்ரிகா லக்ஷணம் பரிபூரணமாகப் பொருந் திய சிலை. நிர்வாணமாகத் திரியும் குழந்தை எப்படிச் சங்கோஜமின்றி நம்முடன் பழகு கிறதோ, நமக்கும் எவ்வித வேற்றுமை உணர்ச் சியும் அதனிடம் தோன்றுவதில்லையோ, அதனி டம் எப்படி இயல்பாக அன்புடன் பழகு கிறோமோ அதே போல பால் உணர்வைக் கடந்து, சரீர போதத்தைக் கடந்து, ஜீவபோ தத்தைக்கடந்து,பிரபஞ்ச சம்பந்தமான அனைத் தையும் கடந்து பெருநிலை அடைந்துள்ள அம் மஹாத்மாவின்முன்னிலையில் எங்களுக்கும் எவ் வித விகாரஉணர்ச்சியும் தோன்றவில்லை. அந்த நிர்வாண சிலையின்முன் தெய்வீகமான உணர்வு களே நிலவுகின்றன. சிலையின் உயரம் ஐம்பத் தேழு அடி. பல மைல்களுக்கு அப்பால் இருந்து கூட மலைமேல் சிலை எடுப்பாகத் தெரிகிறது. மரங்கள் ஏதுமில்லாத மொட்டைப் பாறை யில் சிலை வைத்துச் சுற்றிலும் நாலாபக்கமும் மண்டபங்களும் நுழைவாயில்களும் அமைத் துள்ளார்கள். அம்மண்டபங்களில் இருபத்து நான்கு தீர்த்தங்கர்களின்விக்ரஹங்களும்,இதர சந்நிதிகளும் உள்ளன. அது கோயில்போன்று தான் உள்ளது. அதன் திறந்த நடுமுற்றத்தில் தான் கோமதீசுவரர் சிலை இருக்கிறது. அங்கு உட்கார்ந்து ஐக்கிய வணக்கம் செய்தோம். அர்ச்சகர் பதினைந்து நிமிடங்கள் பாகுபலேஸ் வரரைப்பற்றி விளக்கினார். இது அம்மூர்த்தி யின் மற்றொரு பெயர். அவர் ஒரு சக்கரவர்த்தி திருமகன். சக்கரவர்த்தி ஆக விரும்பிய தம் சகோதரனுடன் போர் செய்தார். வெற்றி பெற் றார். ஆனால் ராஜ்யம் சம்பத்து இவைகளால் என்ன பிரயோஜனம் என்கிற விவேகம் உதய மாயிற்று. அண்ணனுக்கே ராஜ்யத்தைத்

தந்துவிட்டார். தாம் தவம் செய்ய வனத்துக்குப் போய்விட்டார். ராஜ்யத்தைத் துறந்த அவருடைய தீவிரம் எத்தகையதாய் இருந்திருக்கும் என்பது நமக்கு விளங்கும். அன்ன ஆகாராதிகளை மறந்தார், உடலை மறந்தார், உலகை மறந்தார், நிர்வாணநிலை எய்தினர். அவருக்குப் பின்னுல்சாமுண்டராயர்தம்தாயின் விருப்பத்துக்கு இணங்க பாகுபலேஸ்வரருக்குச் சிலைவைத்தார். தமிழ்நாட்டின் சேரன் செங்குட்டுவன், இளங்கோ அடிகள் பற்றிய வரலாறும் இதுபோன்றது அல்லவா? 'துறந்தார் பெருமை துணைக்கூறின் வையத்து இறந்தாரை எண்ணிக்கொண் டற்று' என்பது மறைமொழி அல்லவா? அவர்களுடைய வாழ்க்கைச் செயல்களை நினைக்குந்தோறும், அவர்களுடைய மனநிலைகளை, உணர்வுகளை எண்ணுந்தோறும் இன்றும் நமக்கு நல்லுணர்வு தலையெடுக்கிறது, ஆத்மசாதனத்தில் தீவிரம் உண்டாகிறது. அவர்கள் இறைவனே ஆகிஞர்கள். ஐக்கிய வணக்கத்தை முடித்துக்கொண்டு மண்டபத்தின் மேலே ஏறிப்பார்த்தோம். மண்டபத்திற்குள் எண்ணூறு ஆண்டுகளுக்கு முன்பு செய்யப்பட்ட மணி ஒன்று உள்ளது. அதன் தொனி ஓங்காரம் போன்று ஒலிக்கிறது. அதன் நாதம் இருபத்து நான்கு விளுடிகள் நீடிக்கின்றன. மேலே ஏறி வெளியே போகிறோம். சிலையின் அழகு மனதைக் கவர்கிறது. சிலையின் முன்பு இடப்புறமிருந்து வாயைப் பார்த்தால் சிரித்த கோலம்; எதிரில் நின்று நேராகப் பார்த்தால் முகம் காம்பீர்ய தோற்றம்; வலப்புறமிருந்து பார்த்தால் புன்சிரிப்பு செய்வதுபோல் தோன்றுகிறது. மலைமேலிருந்து சுற்றிலும் பார்க்கிறோம். வீடுகளும் தெருக்களும், கோயில்களும் குளங்களும், மக்களும் வயல்களும், வண்டி வாகனங்களும் அளிக்கின்ற காட்சி, சின்ன பிள்ளைகளின் மணல்வீடு, மணல்சோறு, மணல் பள்ளிக்கூடம்,பொம்மைக் கல்யாணம் போல இருக்கின்றது. அலகிலா விளையாட்டுடையானின் விளையாட்டுத்தானே இப்பிரபஞ்சம். கோமதீஸ்வரரை வலம் வந்து கீழே இறங்குகிறோம். கீழே வந்து மீண்டும் கோமதீஸ்வரரைத் தரிசித்தோம். மூர்த்தியின் இடக்கை ஆள் காட்டிவிரல் சிறிது குறைவாக இருக்கிறது. அதற்குக் காரணமான நிகழ்ச்சி ஒன்று உள்ளது. சம்பந்தர் காலத்தில் சைவம் பெரியதா, சமணம் பெரியதா என்கிற போட்டி வந்தது. அப்போது அனல்வாதம், புனல்வாதம் நடந்தன. சமணர்கள் தோற்றனர். சமணம் தோற்கவில்லை.அதை அனுஷ்டித்த, அப்போதிருந்த அரைகுறை பேர்வழிகளே தோற்றனர் என்று சொல்ல வேண்டும். அவர்களுடைய ஆதிக்கவெறி, பதவி ஆசை, ராஜ சம்பத்தில் மோஹம்தோற்றன என்று சொல்லவேண்டும். அதேபோல அங்கு ராமானுஜர் காலத்தில் வைஷ்ணவம் பெரியதா, ஜைனம் பெரியதா எனப் போட்டி,சர்ச்சைவந்தது.வென்றவர்களுடைய மதத்துக்குத் தோல்வியடைந்தவர்கள் மதம்மாறிவிடவேண்டியது என்று தீர்மானித்து வாதம் புரிந்தார்கள். வைஷ்ணவர்கள் வென்ருர்கள். சமணர்களுக்கு மதம்மாற மனம்வரவில்லை. வேறு மாற்று யோசனை ஒன்று சொல்லுங்கள் எனச் சமரஸம் பேசினர்கள். வைஷ்ணவப் பெரியோர்கள் யோசித்து நீங்கள் வழிபடும் கோமதீஸ்வரரின் இடக்கைஆள்காட்டி விரலைச்சிறிது ஊனம் செய்து விடுங்கள். ஊனமான விக்ரகம் வழிபாட்டிற்கு உதவாது என்று தீர்மானித்துச் சொன்னர்கள். சமணர்களும் அங்ஙனமே செய்தார்கள். இது இருபாலாருடைய பெருமையையே விளக்குகிறது. வைணவர்களுக்குச் சமணர்களை மதம் மாற்றிவிட வேண்டும் என்கிற வெறி இல்லை. சமணர்களுக்குத் தாம் பிறந்த சமயத்தை விட மனமில்லை. இரண்டும் சிறப்பான குணங்களே. இதனல் சமண சமயம் அழிந்துவிடாது. இரு சமயங்களும் இன்றும் இருந்து வருகின்றன. இரண்டும் மனிதனுடைய நல்வாழ்வுக்கு வேண்டிய உத்வேகம், ஜீவசக்தி, உணர்ச்சி ஊட்ட வல்லவைகளாய் இருந்து வருகின்றன. தத்துவ விளக்கம், மெய்ப்பொருள் விளக்கம் என்று எடுத்தால் வேதாந்தத்துக்கு நிகர் உலகில் எதுவுமே இல்லை. புத்த மதம், சமண மதம் இரண்டுமே இந்து மதத்தின் குழந்தைகளே. விவகாரத்துக்காகப் புறச்சமயம் என்று சொன்னுலும் அவைகள் ஹிந்து மதத்தின் பிரிவுகளே ஆகும். ஆகையால் ஹிந்து மதத்தின் உயர்வு சமணத்துக்கும் சொந்தம். சமணத்தின் உயர்வு ஹிந்து மதத்துக்கும் சொந்தம். சமண மதமும் புத்த மதமும் ஹிந்து மதத்துக்குச் செய்துள்ள

உதவிகள், பெருமைகள் அனேகம். நாம் ஆலயம் கட்டி கிரியா விசேஷத்தோடு விக்ரக வழிபாடு செய்வதெல்லாம் அம்மதங்கள் தந்த கொடையே ஆகும். ஆத்மீக வாழ்வில் மேலாம் நிலை அடைய அருள வேண்டும் என்று அனைவரும் பிரார்த்தித்துக் கொண்டு கீழே இறங்கி வந்தோம். சரவணபெலகோலாவில் ஜைனர்கள் மடாலயம் உள்ளது. அதன் சுவாமிகள் எங்களை அழைத்திருந்தார்கள். நாங்கள் துறவியர் மூவரும் அன்பர் ஒருவரும் போனேம். அவர்கள் எங்களை அன்புடன் உபசரித்தது மனதில் மிகவும் ஆழமாகப் பதிந்துள்ளது. அம்மடத்தில் ஒரு நல்ல கோவில் இருக்கிறது. தமிழ்நாட்டின் ஆலயங்களில் செய்யும் பிரம்மோற்சவம் போன்று அவ்வாலயத்தில் அப்போது பத்துநாட்கள்விழாநடந்துகொண்டிருந்தது. அதற்குத் தசலக்ஷண பர்வம் என்று பெயர். உற்சவமூர்த்தி ஊர்வலம்வரத் தயாராக இருந்தது. பெண்மணிகளும் குழந்தைகளும் அன்பர்களும் கூடிப் பஜனைபாடிக் கொண்டிருக்கிருர்கள். ஒவ்வொருநாள் விழாவிற்கும் சத்தியம், அஹிம்சை, திதிக்ஷை, க்ஷமா, பொறுமை, எளிமை, தூய்மை, பக்தி என்று தெய்வ சம்பத்துக்களின் பெயர் இட்டிருக்கிருர்கள். அக்குணத்தை நம் வாழ்வில் வளர்க்க வேண்டும் என்று அறிவுறுத்தப்படுகிறது. நாங்களும் அம்மூர்த்தியை வணங்கிச் சுவாமிகளிடம் பிரியாவிடை பெற்றுத் திரும்பினேம். கோமதீஸ்வரரை மீண்டும் வணங்கி விட்டு விடுதிக்கு வந்து சாமான்களை எடுத்துக் கொண்டு பத்தரை மணிக்குப் புறப்பட்டோம். இந்தச் சிலைசெய்து ஆயிரம் வருஷங்கள் ஆகின்றன. சிற்பியின் பெயர் அரிஷ்டநேமி. இன்றும் புத்தம் புதியதுபோல் உள்ளது. பாகுபலியின் தாயார் பெயர் கூஷ்மாண்டினி தேவி. அவருக்கு ஒரு சந்நிதி உள்ளது. பன்னிரண்டு வருஷங்களுக்கு ஒரு முறை மஹாமஸ்தகாபிஷேகம் என்று ஒரு விழா நடக்கும்.அப்போது உலகிலுள்ள ஜைனர்கள் எல்லாரும் இங்குக் கூடுவார்கள். ஆயிரத்தெட்டு மண் கலசங்களில் அபிஷேகம் பக்தர்களே செய்வார்கள். முதலில் செய்பவர் எழுபத்தையாயிரம் ரூபாய் கட்ட வேண்டும். கடைசியில் செய்பவர் பத்தாயிரம் ரூபாய் செலுத்தவேண்டும். ஹெலிகாப்டரில் புஷ்பங்களைச் சிலையின்மேல் தூவுவார்கள். சிலையின் பாதத்தில் ஒருமீட்டர் நீளமுள்ள தங்கரேகை உள்ளது. பாதத்தில் சித்தசக்கர யந்திரம் என்கிற செப்புத்தகடு ஒன்று வைக்கப்பட்டுள்ளது. சிரவணம் என்ருல் கேட்டல். பெல என்ருல் வெள்ளி அல்லது வெள்ளை. கொலா என்ருல் குளம். சிரவணர் என்று ஒரு ஜைன குருவும் இருந்தார். பாற்கடல் என்பது போல வெள்ளை அல்லது பாற்குளம் எனப் பெயர் வந்ததற்கு ஒரு சம்பவம் சொன்ஞர்கள். முதல் முதலில் சிலையை ஸ்தாபனம் செய்து அதற்கு அபிஷேகம் செய்து கொண்டிருந்தபோது சாமுண்டராயருக்கு சிறிது அகங்கார உணர்வு ஏற்பட்டது.பெரிய காரியம் ஒன்றைச் சாதித்து விட்டதாகவும் தன்னல் இக்காரியம் நிறைவேறியுள்ளது எனவும் தற்பெருமை உணர்வு தோன்றியது. அபிஷேகம் செய்கிற திரவம் சிலையை முழுவதும் நனைக்கவில்லை. இடுப்பிற்குக் கீழ் எத்திரவமும் வரவில்லை. எவ்வளவு கொட்டியும் வரவில்லை. சாமுண்டராயருக்குக் கவலை உண்டாயிற்று. ஒரு கிழவி சிறிய சுண்டாஞ் சட்டியில் பால் கொண்டு வந்து அபிஷேகத்துக்குத் தந்தாள். அதைச் சாமுண்டராயர் அன்புடன் ஏற்று அபிஷேகம் செய்தார். அது சிலை முழுவதையும் நனைத்து வழிந்து ஓடியது. குன்றின் அடிவாரத்தில் உள்ள குளத்தையும் நிரப்பியது. என்ன ஆச்சரியம்! அண்டாபால் வழியவில்லை.சுண்டாஞ்சட்டிபால் வழிந்தோடி குளம் பெருகியது. கோடிக்கணக்கான செல்வம், ஆடம்பரம் பூஜை ஆகாது. மன உணர்வு, பரிபூரணத் தியாகம், சரணுகதி, பக்தியே பூஜை வழிபாடு ஆகிறது. எல்லாம் இறைவன் செயல், நாம் அவன் கையில் கருவி. எல்லாம் அவனே, எல்லாம் அவனே நான் அல்லேன், நான் அல்லேன். நீயே நீயே என்று அவர் கதறி அழுதார். அத்தகைய உணர்வை எங்களுக்குக் கொடு என்று நாங்கள் அனைவரும் பிரார்த்தித்தோம். பஸ் போய்க்கொண்டிருக்கிறது. ஒருவருக்கொருவர் விஷயங்களை இங்ஙனம் பரிமாறிக் கொள்கின்றனர். சில விஷயங்கள் சிலர் பார்வையில் விட்டிருக்கலாம். அவையெல்லாம் எங்கள் பேச்சில் சம்பூரணமாயின.

(தொடரும்)

# குறிப்புகள்

**களிக்கூடம்: (Nursery School)**

குழந்தைகளை வளர்ப்பது ஒரு சிறந்த கலை யாகும். அதில் மக்கள் கவனம் செலுத்துவது மிகவும் அவசியம். குழந்தைகள் மனதில் விஷயங்கள் பசுமரத்தில்அடிக்கின்ற ஆணிபோன்று ஆழப் பதிகின்றன. நல்ல சூழ்நிலையை உருவாக்கி நல்ல சம்ஸ்காரங்களைக் குழந்தைகள் உள்ளத்தில் பதியச் செய்யவேண்டும். நல்ல முறையில் அவர்கள் பயிற்சி பெற்று விடுவார்களானால் பிற்கால வாழ்க்கையில் அவர்கள் கீழ்நிலைக்குப் போகமாட்டார்கள். உடல் வளர்ச்சியும், அறிவு வளர்ச்சியும் விளையாட்டுப் போன்று அவர்களுக்கு வந்து அமைய வேண்டும். மக்களுக்கு நாகரிகம் எது, அநாகரிகம் எது என்று விளங்குவதில்லை. கண்மூடித்தனமாகப் பொருந்தாத பழக்க வழக்கங்களில் சிறுவர் சிறுமிகளை வளர்த்து வருவதில் பல பெற்றோர்கள் ஈடுபடுகின்றனர். சில பொய்ப் பிரச்சாரகர்கள் தங்களுடைய காரியத்தைச் சாதித்துக் கொள்வதற்கு இந்நிலை இடம் தருகிறது. பெற்றோர்களுக்குச் சில விஷயங்களை ஞாபகத்துக்குக் கொண்டுவருகிறோம்.

1. தக்க தருணம் வரும்வரையில் கன்றுக் குட்டியின் கழுத்தில்நுகத்தடிவைக்கக் கூடாது. கன்றுக்குட்டி பருவத்தில் வேலையில் போட்டால் அதன் உடல் வலிவு தடைப்படுகிறது. அதற்கு நிகராக, ஐந்து வயது பூர்த்தியாகாத சிறுவர்கள் சிறுமிகளுக்கு எழுதப்படிக்கக் கற்றுக்கொள்ளும் கல்வி புகட்டலாகாது. நாளடைவில் வருகிற அறிவு வளர்ச்சியை அது தடைப்படுத்தும்.

2. தாய்ப்பாலுக்கு நிகர் தாய்மொழி. சின்னஞ்சிறுவயதில் தாய்மொழி வடிவெடுப்பதற்கு முன்பே, தாய்மொழியை ஒதுக்கி வைத்து விட்டு ஆங்கில மொழிக்குப் போவது நாகரிகமென்று சிலர் கருதுகின்றனர். குழந்தையின் அறிவு வளர்ச்சிக்கு முட்டுக்கட்டை போடுவதற்கு நிகர் இம்முறை.

3. நிழலில் வளருகிற பயிர்கள் பசுமையை இழந்து வெளுத்துப் போகும். அதற்கு நிகராக மேல்நாட்டு நாகரிகத்தை அனுசரித்துக் குழந்தைகளுக்கு உடல் முழுதையும் மூடுகிற பாங்கில் உடை அணிவித்து மேஜோடு, பாதரக்ஷை போடுவது உடல் வளர்ச்சிக்குப் பெருந் தடை பண்ணும். நம் பழைய பண்பை அனுசரித்துக் குழந்தைகளுக்கு இடுப்பில் மட்டும் சிறிதளவு உடை அணிவித்து இளம் வெயிலில் விளையாட விடுதல் மிக நன்று. அதனால் நோயைத் தடுக்கும் திறன் குழந்தைகளின் உடலுக்கு வளர்கின்றது.

4. கிறிஸ்துவப் பாதிரிமார்கள் இந்தியப் பண்பை மாற்றி மேல்நாட்டுப் பண்பை ஓங்குவிப்பதற்காக இந்நாட்டுக்குள் வந்தவர்கள். அவர்களின் சூழ்ச்சிகரமான இயக்கம் வளர்ந்து கொண்டே வருகிறது. இன்றைக்கு அவர்கள் நர்ஸரி ஸ்கூல் மூலமாகத் தங்கள் திட்டத்தை நிறைவேற்றுகின்றனர். கல்லைக் கும்பிடாதே; நெற்றியில் சாம்பலையோ சாயத்தையோ பூசாதே; தலையில் பூ வைக்காதே என்கிறார்கள். கிறிஸ்துவாகிய மெய்க்கடவுளைக்கும்பிடுஎன்று சிறார்க்கு அவர்கள் போதிக்கின்றனர். பசுமரத்தாணிபோன்று இக்கருத்து அவர்கள் உள்ளத்தில் புகுந்து விடுகிறது. இயேசுநாதர் படம் ஒன்றை ஒவ்வொரு குழந்தைக்கும் கொடுத்து இந்த ஆற்றல் தெய்வத்தைக் கும்பிட்டுவா என்று போதிக்கிறார்கள். குழந்தைகள் உள்ளத்தை இப்படித் திருப்பிவிட்டால் பிறகு இந்தியப் பண்புக்கு அவர்கள் திரும்பிவருவது மிகக் கடினம். இப்பொய்ப் பிரசாரத்துக்குப் பெற்றோர்கள் இலக்காகக்கூடாது.

மேற்கூறிய விஷயங்களைப் பெற்றோர்கள் அறிந்து தங்கள் குழந்தைகளை இந்தியப் பண்புக்கு ஏற்ற முறையில் வளர்த்து வருவதில் முழுக் கவனத்தையும் செலுத்துவார்களாக.

---

## செய்திகள்

**நிகழ்பவை :**

ஜூன் மாதம் 15ஆம் தேதி முதல் ஆகஸ்டு மாதம் 15ஆம் தேதி முடிய பருவ அந்தர் யோகம் குற்றாலம் ஐந்தருவி ஸ்ரீ ராமகிருஷ்ண ஆசிரமத்தில் நடைபெறும். இதர விபரங்களுக்குத் தர்ம சக்கரம் வைகாசி மாத இதழில் அட்டை இரண்டாம் பக்கத்தைப் பார்த்துத் தெரிந்து கொள்ளுங்கள்.

---